# * மங்கை *

அக்டோபர்' 92

அருள்மிகு ராஜராஜேஸ்வரி ஆலயம்

(அருள்வலம்)

☆ நவராத்திரி விழாவில்...

☆ சுத்தமான இல்லம் சுகம் தரும்

☆ நீராவிக் குளியல்

☆ மலடு நீங்க (சிறப்புக் கட்டுரை)

இதர வழக்கமான பகுதிகளுடன்

விலை ரூ. 6/-

வரும் நவம்பர்' 92 மங்கை

தீபாவளி சிறப்பிதழாக வெளிவருகிறது.

விலை ரூ 8/-




ஒன்று சேர்த்திடுங்கள்
மேகி ஜிக்-ஸா புதிர்



வானவீதியில் விரட்டிச் செல்லுங்கள்,
உங்கள் மேகி ஸ்கை
ப்ளேஸரில்!





கடல்-வானப்பயணத்தை
பூர்த்தி செய்வீர் மேகி ஏஸ்
அட்வென்ச்சரர் கேமில்!

திருடனைப் பிடியுங்கள் மேகி
ஹூ-டன்-இட் மிஸ்டிரி
விளையாட்டில்

# உல்லாசம் பெறுவீர், வியப்பூட்டும் துணிகர விளையாட்டுகளில்!

## இலவசப் பரிசுகள் - மேகி கிளப் உறுப்பினர்களுக்கு!

வஞ்சகமான எதிரிகளை சாதுரியமாக
முறியடியுங்கள், மேகி செய்ட்டர்ஸ்
ஆ:ப் தி ரெட் ஸ்டார்
விளையாட்டில்!





**ஹலோ! மேகி கிளப்பில் சேருங்கள்; மேகியின் துணிகர உலகிற்குள் செல்லுங்கள்.**

ஐந்து மேகி நூடுல்ஸ் காலி பேக்குகளிலிருந்து அதன் முன்-பக்கத்தில் உள்ள இந்த முத்திரையை வெட்டி எடுத்து எங்களுக்கு அனுப்புங்கள்-உங்களுக்குப் பிடித்த இலவசப் பரிசைப் பெற. ஆறு முதல் எட்டு வாரங்களுக்குள் மேகி கிளப்பில் இருந்து குதூகலமளிக்கும் பரிசு உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

மறவாதீர்! உங்களுக்கு விருப்பமானப் பரிசைக் குறிப்பிட்டு எழுதும்போது, உங்கள் பெயர், முகவரி, பிறந்த தேதி ஆகியவற்றையும் எழுதுங்கள். ஏற்கனவே நீங்கள் மேகி கிளப் உறுப்பினராக இருந்தால், உறுப்பினர் எண்ணையும் எழுதுங்கள். இதுவரை உறுப்பினராக ஆகவில்லை என்றால் இப்போது வருகிறது வாய்ப்பு! மேலே உள்ள விவரங்களை எழுதும்போது, உறுப்பினராக விரும்புவதையும் தெரிவியுங்கள். இலவசப் பரிசுடன், இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும் உங்களுக்கு அனுப்புவோம்.

எங்கள் முகவரி :

**MAGGI CLUB**
P.O. Box 5788 New Delhi-110 055

இலவசம்! மேகி "வேர்ல்ட் ஆ:ப் அனிமல்ஸ்" புதிர்! ஒவ்வொரு 2 இலவசப் பரிசுகளுக்கும் உங்களுக்கு ஒரு மேகி "வேர்ல்ட் ஆ:ப் அனிமல்ஸ்" புதிர் இலவசமாகக் கிடைக்கும்.




மேலும் ஒரு சலுகை: இதுவரை மேகி போட் ஜூஷெலைப் பெற்றுக்கொள்ளவில்லை என்றால், இப்போதே பெற்றுக் கொள்ளுங்கள்.

# உங்கள் கண்மணியின் கனவை கனவாகவே இருக்க விடாதீர்கள்

## குழந்தைகள் பரிசு வளரும் நிதி உதவி கொண்டு கனவை நனவாக்குங்கள்.



உங்கள் கண்மணிக்கு ஒரு பரிசை அளியுங்கள் அவனுடன் கூடவே வளரும் அப்பரிசு. யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதியில் முதலீடு செய்யுங்கள். உங்கள் கண்மணி 21 வயதாகும் போது நீங்கள் முதலீடு செய்யும் அப்பணம் அவனுக்கு தேவைக்கேற்ப உதவும்.

ஒரு மொத்த தொகையை ஒரே தடவையாக பரிசளிக்கலாம். அல்லது சிறு சிறு தொகையாக வருடா வருடம் செலுத்தலாம். எப்படியாயினும் உங்கள் கண்மணி 21 வயதாகும் போது அவன் லட்சாதிபதியாவதை உறுதி செய்யலாம் (அவனுக்கு தேவையானால் 18 வயதாகும் போது பணத்தை எடுக்கும் அனுகூலமும் உண்டு.)

யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. உங்களது சிறிது ஆலோசனை உங்கள் கண்மணியின் சிறந்த எதிர்காலத்தின் உத்தரவாதம்.

விண்ணப்ப பாரங்கள் யூனிட் ட்ரஸ்ட் கிளைகள், எல்லா பாங்குகள் மற்றும் கலெக்ஷன் சென்டர்களில் அங்கீகரிக்கப்படும்.

விண்ணப்ப பாரம் மற்றும் ப்ரோஷருக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் கிளை முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டை அணுகவும்.

குழந்தைகள் பரிசு வளரும் நிதி

~~13%~~ **14% டிவிடெண்ட்**

**+ 3 வருடத்திற்கொருமுறை போனஸ்**



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

22 மில்லியனிலும் அதிகம் யூனிட்தாரர்களின் சேவையில்.

எல்லா செக்யூரிட்டீஸ் இன்வெஸ்ட்மெண்ட்களும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவை ஆகும். முதலீடு செய்வதற்கு முன் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

**Branch Offices:** • Madras Ph: 517101, 517178 • Coimbatore Ph: 210399 • Madurai Ph: 34597 • Trichy Ph: 27774

Sista's UTI.1968.92 TM E




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## போர் தொடர்வது ஏன்?

"அன்பு கொண்டவன் எந்த உயிரைக் கொல்வதையும் கெட்ட செயல் என நினைக்கிறான். அவன் எதையும் கொல்ல வேண்டியது இல்லை. கொல்லவும் மாட்டான்" என்று மகாத்மா காந்தி 75 ஆண்டுகளுக்கு முன் தாம் எஸ்தர் மேனன் என்ற ஆங்கிலப் பெண்மணிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் கூறியுள்ளார்.

முதலாவது உலகப் போர் முடிந்ததும் தென் ஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போரிட்ட மோகன்தாஸ் கரம் சந்த் காந்தி இந்தியாவிற்குத் திரும்பி வந்து இந்தியாவில் எவ்வகையில் ஆங்கில அடக்குமுறை ஆட்சியை ஒழிப்பது என யோசிக்கலானார்.

அவர் ஒரு நல்ல பாம்பை உதாரணமாகக் கூறி "பாம்பிற்கு இரக்கம் காட்டுபவன் அதைக் கண்டு பயப்பட மாட்டான். அதைக் கொல்லவும் மாட்டான். அந்தப் பாம்பும் அவனுக்குத் தீங்கு இழைக்காது. இத்தகைய கள்ளங் கபடமற்ற மனம் ஒருவனிடம் இருக்க வேண்டும். ஆனால் எல்லா நாடுகளும் இத்தகைய மனப்பான்மை கொள்ளுமா என்பது சந்தேகமே. எங்கும் சீரான மாறுதல் ஏற்படாதுதான். இதனால்தான் நாடுகள் போரில் இறங்குகின்றன. நேர்மையில் செல்லும் நாடு தன் ஆத்ம சக்தியுடன் போரிட்டு அடங்கும்" என்றார்.

இது எவ்வளவு உண்மை! பணக்கார ஏழை நாடுகளுக்கிடையே எவ்வளவு வித்தியாசம்! பணக்காரனுக்கும் ஏழைக்கும் இடையேயும் எவ்வளவு வித்தியாசம்! இதன் காரணமாகத்தான் இரண்டாவது உலகப் போரும் மற்றும் சிறுசிறு மோதல்களும் உலகில் ஏற்பட்டு மக்கள் அவதிப்பட்டனர். போர் இன்னமும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

அக்டோபர் 2-ல் வரும் காந்தி ஜெயந்தி நாளில் நாம் உலக நாடுகள் போரைத் தவிர்க்க வேண்டும் எனப் பிரார்த்தனை செய்வோமாக!

மதிமுகம்: 91 அக்டோபர் 1992 புன்னகை: 4

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00

# நம் புதிய குடியரசுத் தலைவர்





**து**ணைக் குடியரசுத் தலைவராக இது வரை இருந்த டாக்டர் சங்கர் தயால் சர்மா ஜூலை 25ந் தேதி நம் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். நம் நாட்டின் மிக உயர்ந்த இப்பதவியை அவர் ஐந்தாண்டு காலம் வகிப்பார்.

நாடாளும் மன்றத்தின் இரு அவை உறுப்பினர்களும் மாநிலங்களின் சட்டமன்ற உறுப்பினர்களும் சேர்ந்து குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். இம்முறை குடியரசுத் தலைவரை ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என ஆளும் கட்சியும் எதிர்கட்சிகளும் முயன்றன. ஆனால் அம்முயற்சி வெற்றி பெறாததால் போட்டி ஏற்பட்டு ஆளும் கட்சி டாக்டர் சர்மாவை ஆதரித்தது. எதிர்க்கட்சியினர் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த டாக்டர் ஸ்வெல்லைப் போட்டியாக நிறுத்தினர். காங்கிரஸ் கட்சியும் அதன் தோழமைக் கட்சிகளும் டாக்டர் சர்மாவை ஆதரிப்பதாக அறிவித்ததால் அவரது வெற்றி முன்கூட்டியே நிச்சயமாகி விட்டது.

டாக்டர் சங்கர் தயால் சர்மா 1918-ல் போபாலில் பிறந்தார். 1939-ல் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழ

கத்தில் ஆங்கிலத்திலும் சட்டப் படிப்பிலும் பட்டம் பெற்று நாடு திரும்பினார். லக்னௌ பல்கலைக் கழகத்தில் அவர் விரிவுரையாளராகப் இரண்டு ஆண்டுகள் பணிபுரிந்த பின் அவர் மீண்டும் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திற்குச் சென்று அங்கும் விரிவாளராகப் பணியாற்றி அரசியல் சட்டத் துறையில் டாக்டர் பட்டம் பெற்று அதன் 'பாரில்' வழக்கறிஞரானார்.

இந்தியாவிற்கு வந்து அவர் வழக்கறிஞராகத் தொழில் நடத்தினார். ஆனால் அதற்கு முன் அரசியலில் ஈடுபட்டு காங்கிரஸில் சேர்ந்தார். 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் அவர் கலந்து கொண்டார். விடுதலைப் போரில் கலந்து கொண்டு பலமுறை சிறைக்குச் சென்றார். போபால் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக 1952லிருந்து 1956 வரையும் அதற்குபின் அமைந்த மத்தியப் பிரதேசத்தின் முதலமைச்சராகவும் பதவியில் இருந்தார்.

அவர் காங்கிரஸ் செயற்குழுவின் உறுப்பினராயும் அகில இந்தியக் காங்கிரஸின் பொதுச் செயலாளராகவும் இருந்திருக்கிறார். 1971ல் நாடாளுமன்ற மக்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு இந்திராகாந்தியின் அமைச்சரவையில் தகவல் தொடர்பு அமைச்சரானார். 1980-ல் அவர் மீண்டும் நாடாளும் மன்ற மக்களவையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1984-ல் நடந்த தேர்தலில் அவர் போட்டியிடவில்லை. சிறிது காலம் ஆந்திரப் பிரதேச ஆளுனராக இருந்து அவர் தம் நாட்டுத் துணைக் குடியரசுத் தலைவராக ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மாநிலங்களவையை பாரபட்சமில்லாமல் நடத்தி அவர் எல்லாக் கட்சிகளின் பாராட்டுதல்களையும் பெற்றார்.

டாக்டர் சர்மா கல்வித் துறை நிபுணர். அவர் பல நூல்களை எழுதியுள்ளார். பல முக்கிய வெளியீடுகளின் பதிப்பாசிரியர். இதற்கு முன் குடியரசுத் தலைவர்களாக இருந்த டாக்டர் ராதா கிருஷ்ணன், டாக்டர் ஜாகிர் ஹுசைன் போல இவரும் கல்வித்துறையின் மேதை.

குடியரசுத் தலைவராகப் பதவி ஏற்றதும் டாக்டர் சர்மா "நாட்டு மக்களின் ஒளிமயமான எதிர்காலத்தை நல்லவிதமாக உருவாக்கப் பணியாற்றும் சக்தியையும் என் கடமையை நன்கு நிறைவேற்றும் ஆற்றலையும் ஆண்டவன் எனக்கு அருள்புரியுமாறு வேண்டுகிறேன்" எனக் கூறினார்.

புதிய குடியரசுத் தலைவரின் விருப்பங்கள் யாவும் நிறைவேற வேண்டும் என 'அம்புலிமாமா' கூறி அவருக்குத் தன் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறது.






# கிராமம் போ

**சோ**லையூரில் சோலையப்பன் என்ற சிறு விவசாயி இருந்தான். அவனது ஒரே மகன் அருள்மணி. அவன் தன் மகன் தன்னைப் போல எழுத்தறிவற்றவனாக இருக்கக் கூடாது என நினைத்து உள்ளூர் நடுத்தரப் பள்ளியில் கொண்டு போய்ச் சேர்த்தான். அருள்மணியும் நன்கு படித்து எல்லா வகுப்புகளிலும் முதலாவது மாணவனாக விளங்கி எட்டு வகுப்புகளையும் கடந்து விட்டான். இனி மேற்கொண்டு படிப்பைத் தொடர வேண்டுமானால் அவன் அடுத்துள்ள பெரிய ஊரான திருப்பூரில் போய்த் தங்கிப் படித்தாக வேண்டும்.

அருள்மணி விவரம் தெரிந்தவன். தான் சாதாரண ஏழைப்பட்ட குடும்பத்தில் பிறந்தவன் என்பதை அறிந்தவன். அதனால் அவன் மேல் படிப்பைப் பற்றிய ஆசையை விட்டுவிட்டுத்தன் தந்தையின் விவசாயத்தில் தானும் ஈடுபடுவது எனத் தீர்மானித்துக் கொண்டான். அதைத் தன் தந்தையிடமும் கூறினான்.

ஆனால் சோலையப்பனோ "அருள் நம் குடும்பத்தில் நீதான் நன்றாகப் படிக்கிறவன். எனவே உன் படிப்பை நிறுத்த நான் விரும்பவில்லை. நீ திருப்பூருக்குப் போய்ப் படி. இதற்காக நான் எப்பாடு பட்டாவது உன் படிப்பிற்காக ஏற்படும் செலவைச் சமாளித்துக் கொள்கிறேன். என் இரண்டு வயல்களில் ஒன்றை அடமானம் வைத்துப் பணம் புரட்டுகிறேன். நீ கவலைப்படாமல் நன்கு படித்து முன்னுக்கு வா'' என்று கூறினான்.

அருள்மணியும் தன் ஊரை விட்டுப் பெரிய நகரமான திருப்பூரில் போய்த் தங்கிப் படித்தான். அவன் சில ஆண்டுகள் இருந்து கல்லூரிப்

—சிவனார் செல்வன்—



தார். அவனும் அவரது அழைப்பை ஏற்று அவரது வீட்டிற்குச் சென்று விருந்து உண்டான். சாப்பிட்டு முடிந்தபின் அழகு சுந்தரம் "அருள்! எனக்கு இருப்பவள் ஒரே மகள். ஆண்டவன் அருளால் நான் பல லட்சங்கள் சம்பாதித்து விட்டேன். நான் என் மகளுக்கு ஒரு நல்ல வாலி பனைத் திருமணம் செய்து வைக்க நினைக்கிறேன். எவ்வளவோ வாலி பர்களைப் பற்றி யோசித்தும் யாரும் ஏற்றவனாகத் தோன்றவில்லை. ஆனால் உன்னைக் கண்டபின் நீதான் நான் எதிர்பார்க்கும் மாப் பிள்ளை என தீர்மானித்து விட் டேன். உன்னை என் மாப்பிள்ளை யாக்கிக் கொண்டு என் வீட்டி லேயே வைத்துக் கொள்ள விரும்பு கிறேன். நீ என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார்.

படிப்பையும் முடித்தான். அதன் பிறகு அவன் தனக்கு நல்ல உத்தி யோகம் ஏதாவது கிடைக்குமா எனப் பார்க்கலானான்.

அம்முயற்சியில் அவன் அழகு சுந்தரம் என்ற பணக்கார வியாபாரி யைச் சந்தித்தான். அவரும் அருள் மணியின் அறிவுக் கூர்மையையும் சுறுசுறுப்பையும் எல்லோருடனும் இனிமையாகப் பேசும் இயல்பை யும் கண்டார். அவனுக்குத் தன் ஒரே மகளான நீலாவைக் கல்யாணம் செய்து வைத்து அவனைத் தன் வீட்டிலேயே வைத்து கொள்வது என்று தீர்மானித்தார்.

ஒருநாள் அவர் அருள்மணியைத் தன் வீட்டில் விருந்துண்ண அழைத்

அது கேட்டு அருள்மணி "இது நான் எதிர்பாராதது. சாதாரணப் பட்ட எங்கள் குடும்பத்தோடு லட் சாதிபதியான நீங்கள் சம்மந்தம் செய்து கொள்வதா? என் சம்பாத் தியத்தை நம்பி என் பெற்றோர் கள் இருக்கிறார்கள். அவர்களை விட்டுப் பிரிந்து நான் வாழ முடி யாது" என்றான்.

அழகுசுந்தரமும் "எனக்கு ஏழை பணக்காரன் என்ற வேறுபாடே இல்லை. என் மகளுக்கு வரும் கண வன் நல்ல குணங்கள் கொண்ட வனாக இருக்க வேண்டும். உன்

தாய் தந்தையரை பற்றிக் கவலைப் படாதே. அவர்களையும் உன்னோடு இங்கு வந்திருக்கச் செய்கிறேன். நீ மட்டும் உன் சம்மதத்தைத் தெரிவி'' என்றார்.

அருள்மணியும் ''என் தாய் தந்தையர் இதற்குச் சம்மதித்தால் எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை'' என்றான். அழகு சுந்தரம் மறுநாளே அருள்மணியை அழைத்துக் கொண்டு சேலையூருக்குச் சென்றார். அவர் சோலையப்பனிடம் விஷயத்தை விளக்கி அருள் மணியை அந்த விவாகத்திற்கு ஒப்புக் கொள்ளச் செய்யுமாறு கேட்டுக் கொண்டார்.

சோலையப்பனும் தன் மகனிடம் ''அருள்! நாங்களோ வயதானவர்கள். உனக்கு நல்லதொரு வாய்ப்பு கிடைத்துள்ளது. இதை நழுவ விடாதே. நீ இவரது மகளை மணந்து கொள். எங்களைப் பற்றி கவலைப்படாதே'' என்றான். அருள் மணியும் அந்த விவாகத்திற்குச் சம்மதிக்க அவனுக்கும் நீலாவுக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

திருமணம் ஆனதும் அழகுசுந்தரம் சோலையப்பனையும் அவனது மனைவியையும் கூடத் தன்னோடு வந்து விடும்படி அழைத்தார். ஆனால் அவர்கள் தம் கிராமத்திலேயே இருப்பதாகக் கூறிவிட்டனர்.



சில நாட்களான பின் அழகு சுந்தரம் அருள்மணியிடம் ''உன் தாய் தந்தையர் இங்கு வர மறுக்கிறார்கள். அவர்கள் வசதியாய் வாழ ஐயாயிரம் ரூபாய் அனுப்புகிறேன்'' எனக்கூறித் தன் கணக்குப் பிள்ளையை அழைத்து ''நீர் ஒரு ஐயாயிரம் ரூபாய் எடுத்துக் கொண்டு சோலையூருக்குப் போய் என் சம்மந்தியிடம் கொடுத்து வாரும்'' என்றார். கணக்குப் பிள்ளையும் தலையை ஆட்டிவிட்டுப் போனார். அதைக் கேட்ட அருள்மணி தன் மாமனாரின் தாராள மனப்பான்மையைக் கண்டு பூரித்துப் போனான்.

சில மாதங்கள் கழிந்தன. அருள்



மணியைக் காண சோலையூரிலி ருந்து நாட்டு வைத்தியர் நாராய ணன் வந்தார். அப்போது அழகு சுந்தரம் வீட்டில் இருக்கவில்லை. அவர் அவனிடம் "என்னப்பா! கல்யாணமானதும் நீ ஊர்ப்பக்கம் வரவே இல்லையே. உன் தாய் தந்தையரை மறந்து விட்டாயா? உன்னைப் பற்றி ஒரு தகவலும் வரவில்லையே" என்று கேட் டார்.

அருள்மணியும் "நான் வரலாம் என்றுதான் இருந்தேன். அதற்குள் என் மாமனார் தம் கணக்குப் பிள்ளையிடம் ஐயாயிரம் ரூபாய் என் தந்தையிடம் கொடுத்து வரும் படி கூறினாரே! அது கிடைத் திருக்குமே. அவர்கள் சுகமாகத் தானே இருக்கிறார்கள்?" என்று கேட்டான்.

நாராயணனோ "பணமா! ஐயாயிரமா அனுப்பினார்!" அது கிடைத்திருந்தால் அவர்கள் வசதி யாக வாழ்ந்து கொண்டிருப்பார் களே" என்றார். அதைக் கேட்ட நீலா கணக்குப்பிள்ளையை அழைத்து விசாரித்ததில் தன் தந்தை அவரைச் சோலையூருக்குப் போக வேண் டாம் என்றும் பணமும் அனுப்பத் தேவை இல்லை என்றும் கூறிய தாகத் தெரிந்தது.

இதைக் கேட்ட நீலா "ஓ! இதுவா சங்கதி" என்று மனம் வருந்திக் கூறினாள்.

மறுநாள் அவள் திடீரென மயக் கம் போட்டு விழுந்து விட்டாள். அவளால் பேச முடியவில்லை. கை கால்கள் அசையவில்லை. அழகு சுந்தரம் பதறிப்போய் பெரிய டாக் டரை அழைத்து வந்தார். அவர் கூறிய மருந்துகளை ஒரு வாரம் கொடுத்தும் நீலா குணமடைய வில்லை.

அப்போது அருள்மணி "இது இந்த டாக்டரால் குணப்படுத்த முடியாது. எங்கள் ஊர் நாட்டு வைத்தியர் நாராயணனை வர வழைக்கிறேன். அவரால் குணப் படுத்த முடியும்" என்றான். அழகு சுந்தரமும் தன் மகள் எப்படியா வது குணம் அடைந்தால் போதும்

என நினைத்து நாராயணனை வர வழைத்தார்.

நாராயணனும் வந்து நீலாவைப் பார்த்துவிட்டு ''இந்த நோய் மருந் தால் மட்டும் குணமாகி விடாது. இடமாற்றம் தேவை. காற்றோட்ட மாய்ச் சிறந்த வயல்வெளிகளுள்ள கிராமத்தில் இருக்க வேண்டும். இவளைச் சோலையூருக்கு இவளது மாமனார் வீட்டிற்கு அனுப்புங்கள். நானும் மருந்து கொடுக்கிறேன்'' என்றார்.

அழகுசுந்தரம் அரைமனதோடு தான் இதற்கு இசைந்தார். அருள் மணி நீலாவை சோலையூருக்கு அழைத்துச் சென்றான். அவர் மாமனார் வியாபார விஷயங்களை கவனிக்கத் திருப்பூரிலேயே இருந்து விட்டார். சோலையப்பனும் அவன் மனைவியும் தன் மகனையும் மரு மகளையும் அன்புடன் வரவேற்றார் கள்.

மாமியார் மாமனார் கவனிப் பில் நீலா விரைவில் குணம் அடைந் தாள். அவளுக்கு கிராமத்து வயல் வெளி, ஏரி, சுற்றுப்புறம் எல்லாம் பிடித்துப் போயிற்று. கைகால் கள் சுவாதீனம் அடைந்தன. நன்கு பேசும் சக்தியைப் பெற்று விட்டாள்.

அவள் தன்னைக் காணவந்த தன் தந்தையிடம் ''எனக்கு இந்த வாழ்க்கை பிடித்து விட்டது. என் மாமியாரும் மாமனாரும் என்னை நன்கு கவனித்துக் கொள்கிறார் கள். அமைதியான இந்த இடத்தை விட்டு ஜனநெருக்கமும் இரைச்ச லும் உள்ள அந்த ஊருக்கு வர மாட் டேன். நீங்கள்கூட அம்மாவுடன் இந்த ஊருக்கு வந்துவிடலாம்'' என்றாள்.

அழகு சுந்தமும் தன் மகளின் உடல்நிலையில் ஏற்பட்ட நல்ல மாற்றத்தைக் கண்டு மகிழ்ந்து ''உன் விருப்பப்படியே நாங்களும் வந்து விடுகிறோம். நான் சம்பா தித்ததே தலைமுறை தலைமுறைக் கும் போதுமே'' என்றார்.



# முப்பாட்டனார் பார்!

இராணுவத்திலிருந்து ஓய்வு பெற்ற வீரசிம்மன் என்பவன் ஒருமுறை தலை நகருக்குச் சென்றான். அங்கு பழைய பொருள்களை விற்கும் கடையில் முறுக்கிய மீசையுடன் கத்தி கேடயம் கையில் ஏந்தி நிற்கும் நடுத்தர வயது வீரன் ஒருவனின் வண்ணப் படத்தை அவன் பார்த்தான்.

கடைக்காரன் "ஐயா! இது ஐநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஒரு வீரரின் படம். இவர் போரில் நூற்று ஐம்பது பேர்களைத் தம் வாளால் கொன்று வந்தாராம். நீங்கள் இதனையே வைத்த கண் வாங்காமல் பார்ப்பதால் இதை நூறு வராகன்களுக்குக் கொடுக்கிறேன்" என்றான்.

வீரசிம்மன் தன்னிடமுள்ள பணம் எவ்வளவு எனப் பார்த்தபோது தொண்ணூறு வராகன்களே இருந்தன. அதனால் அந்த உருவப்படத்தை வாங்க முடியாமல் சென்றான். இதற்கு ஒரு மாதத்திற்குப்பின் அவன் தன்னைப் போல ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்ற சூரசேனனைக் காண அவனது வீட்டிற்குச் சென்றான். அங்கு அவன் தான் கடையில் கண்ட வீரனின் உருவப்படம் மாட்டப்பட்டிருப்பதைக் கண்டான்.

அப்போது சூரசேனன் "இந்தப் படத்தைக் கண்டு மலைத்து விட்டாயா? இவர் யார் தெரியுமா? என் முப்பாட்டனார். இவர் போரில் தன் வாளுக்கு நூற்றைம்பது பேர்களை இரையாக்கிய மாவீரர்" என்றான் பெருமை பொங்க.

வீரசிம்மனும் "அடாடா! அன்று என்னிடம் பத்து வராகன்கள் கூட இல்லாமல் போயிற்றே. இருந்திருந்தால் இன்று இந்த வீரர் என் முப்பாட்டனாராயிருப்பாரே" என நினைத்துப் பெருமூச்சு விட்டான்!





# மாய மாளிகை

## 6

*[சாரஸசரோவரத்தின் மத்தியிலுள்ள வசந்த மாளிகையிலிருந்து இளவரசி வித்தியாவதியைக் கடத்திக் கொண்டு யாரோ காட்டுப் பகுதிக்குள் கொண்டு சென்று விட்டார்கள். அவளை தேடிக் கண்டுபிடிக்க மகேந்திரன் என்ற இளைஞன் மன்னனின் அனுமதி பெற்றான். மாயமாளிகைக்குக் கொண்டு செல்லப்பட்ட இளவரசி தான் முற்றிலும் புதிய இடத்தில் இருப்பதை உணர்ந்தாள். பிறகு—]*

வித்தியாவதி தன்னைக் கவர்ந்து வந்த கிழவி கூறியபடியே அந்த அறையில் மஞ்சத்தின் மீது படுத்து கொண்டாள். ஆனால் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. தந்தையின் உடல் நலம் குன்றியதாகக் கூறி ஏமாற்றித் தன்னை அங்கு அழைத்து வந்த சதிகாரர்கள் யார் என்று அவள் யோசிக்கலானாள். சதிக்கு ஆளான தான் இனி மன உறுதி யுடன் நடந்து எத்தகைய நிலையை யும் சமாளிக்க வேண்டும் என்று அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

இப்படி ஒரு முடிவு எடுத்த பின் அவள் நன்கு தூங்கினாள். கமலம்மாளைப் போல இருந்த அந்தக் கிழவி வந்து தட்டி எழுப் பிய பிறகே அவள் கண் விழித்து எழுந்தாள். சுற்றிலும் பார்த்த போது அறைக்குள் நல்ல சூரிய



வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. காலையாகி வெகு நேரமாகி விட்டது என அவள் தெரிந்து கொண்டாள்.

"நன்றாகத் தூங்கினாயா?" என்று அந்தக் கிழவி கேட்கவே வித்தியாவும் "ஆம். நான் குளிக்க வேண்டும்" என்றாள். அக்கிழவியும் அவளை குளியல் அறைக்கு அழைத்துச் சென்றாள். இளவரசியும் உள்ளே போய்க் குளித்து விட்டு அங்கு தனக்காக மடித்து வைக்கப்பட்டிருந்த ஆடைகளை எடுத்து அணிந்து கொண்டாள். அவள் குளியலறையிலிருந்து வந்ததும் அங்கு தன் ஆடைகளைப் போலவே அணிந்திருந்த இரு பணிப்பெண்களைக் கண்டாள்.

கிழவி அவர்களை வித்தியாவதிக்கு அறிமுகப்படுத்தி "இவள் நீலா. அவள் மாலா. இவர்கள் இருவரும் உனக்குப் பணிபுரிய வந்தவர்கள். உனக்கு எது வேண்டுமானாலும் இவர்களிடம் கூறிப் பெற்றுக் கொள்ளலாம்" என்றாள். அப்போது வித்தியா "நீயும் இங்கே தானே இருப்பாய்?" என்று கேட்டாள்.

கிழவியும் "நான் எப்போது இருப்பேன். எப்போது இருக்க மாட்டேன் என்பதை எல்லாம் சொல்ல முடியாது. ஒரு விஷயம் நினைவில் வைத்துக் கொள். நீ கேட்கும் கேள்விகளுக்கு எல்லாம் நான் பதில் சொல்லிக் கொண்டிருக்க மாட்டேன். இங்குள்ள மற்றவர்களும் சொல்ல மாட்டார்கள்" என்று கூறிவிட்டு அங்கிருந்து உடனே போய் விட்டாள்.

காலை உணவு உண்டபின் வித்தியா அந்தப் பெரிய அறையின் ஒரு சன்னலருகே இருந்த இருக்கையின் அமர்ந்து வெளிப்புற இயற்கை அழகை ரசிக்கலானாள்.

மதிய வேளையிலும் அவளுக்கு உணவை ஒரு பணிப்பெண் கொண்டு வந்து வைத்தாள். அவள் அதைச் சாப்பிட்டு விட்டு உடனேயே கட்டிலில் படுத்துக் கொண்டாள். ஒரு பணிப்பெண் அவளருகே நின்று வெண்சாமரம் வீசலானாள்.



மாலைப் பொழுதாகும் வரை யாராவது ஒரு பணிப்பெண் இளவரசியுடன் இருந்து கொண்டே இருந்தாள்.

மாலையில் அந்தக் கிழவி வந்து "இளவரசி! இனிச் சற்று காற்றாட பூங்காவைச் சுற்றி விட்டு வரலாம். வா" என்று கூறி அவளை அழைத்துக் கொண்டு சென்றாள். வித்தியாவதியும் பதில் பேசாமல் அவளுடன் சென்றாள். பூந்தோட்டத்தின் மெல்லிய இளம் காற்று அவளுக்கு இதமாக இருந்தது.

அவள் பின்னாலேயே நடந்த கிழவி ஓரிடத்தில் உட்கார்ந்து அவளையே கவனிக்கலானாள். வித்தியா அங்குள்ள மலர்களைக் கண்டு ரசித்தவாறே பச்சைப் பசேலென்று இருந்த புல்தரை மீது நடந்து சென்றாள். இருட்ட ஆரம்பிக்கவே இருவரும் அங்கிருந்து திரும்பி மாயமாளிகைக்குள் சென்றனர்.

அப்போது வித்தியா தான் முந்தின இரவில் படுத்திருந்த அறையைத் தாண்டிச் சென்றதை கவனித்தாள். கிழவி அடுத்திருந்த அறையின் கதவைத் திறந்தாள். அதுவும் பெரிய அறையே. ஆனால் அங்கு தொங்கிய திரைச்சீலைகள் வேறு விதமாக இருப்பதைக் கண்டாள்.

வித்தியா அந்த அறையில்தான் இரவு உணவை உண்டாள். அதே அறையில் இருந்த கட்டிலில் படுத்து தூங்கினாள். மறுநாள் காலை அவள் எழுந்து சன்னல் வழியே வெளியே பார்த்தாள். அவள் முன்தினம் கண்ட இயற்கைக் காட்சியைக் காணவில்லை. பூந்தோட்டத்தின் மற்றொரு பகுதியைக் காண்பதாக அவள் அறிந்து கொண்டாள். அதன்பின் அவள் குளிக்கச் சென்றாள்.

குளித்து விட்டு அங்கு மடித்து வைக்கப்பட்டிருந்த ஆடைகளை அணிந்து கொண்டு அவள் குளியல் அறையிலிருந்து வெளியே வந்தாள். அப்போதும் வெளியே நின்ற இரு பணிப்பெண்கள் தன் ஆடைகளைப் போன்ற ஆடைகளையே

அணிந்திருப்பதைக் கண்டாள். அவர்கள் எல்லா விதத்திலும் தன்னைப் போல இருப்பதையும் வித்தியா கண்டாள்.

அப்போது கிழவி "இவள் சுரேகா. மற்றவள் சுலேகா. இன்றைக்கு இவர்கள் உன் பணிப்பெண்கள்" என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டாள். அப்போது வித்தியா ஒரு பணிப்பெண்ணைப் பார்த்து "சுரேகா! உன்னிடம் ஒரு கேள்வி கேட்கட்டுமா?" என்றாள். அந்தப் பெண்ணோ "நான் சுரேகா இல்லை. சுலேகா. ஏதாவது குடிக்கக் கொண்டு வரட்டுமா?" என்று கேட்டாள்.




வித்தியாவும் "வேண்டாம். நீ இங்கே நீண்டகாலமாக இருக்கிறாயா?" என்று கேட்டாள். சுலேகாவும் "இல்லை இளவரசியாரே! நான் வந்து இரண்டு மாதங்களே ஆகின்றன" என்றாள். அப்போது வித்தியா "இதற்கு முன் எங்கே இருந்தாய்?" என்று கேட்கவே அவளும் "என் வீட்டில்தான் இருந்தேன்" என்றாள். வித்தியாவும் "உன்னை எனக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. நான் என் அரண்மனைக்குச் செல்லும்போது உன்னையும் என்கூட அழைத்துப் போக நினைக்கிறேன். என்னோடு வருகிறாயா?" என்று கேட்டாள்.

அப்போது அவள் "இதுவும் உங்கள் அரண்மனைதானே! இதன் சொந்தக்காரர் விரும்பும்வரை நீங்கள் இங்கேதான் இருக்கப் போகிறீர்கள். அதன்பிறகு அவர் உங்களை எங்கு வேண்டுமானாலும் அழைத்துச் செல்லலாம். ஆனால் அது எப்போது நடக்கும், அந்த இடம் எது என்று என்னால் சொல்ல முடியாது" என்றாள்.

வித்தியாவதியும் அதைக் கேட்டு "ஓ! அப்படியா?" என்று கூறி யோசிக்கலானாள். அவள் மேற்கொண்டு எதுவும் கேட்கவில்லை. அன்றைய மதிய உணவு வந்ததும் அதனைச் சாப்பிட்டுவிட்டு வித்தியா கட்டிலில் படுத்தாள். அவள் சற்று தூரத்தில் நின்ற பணிப்பெண்ணைப் பார்த்து



"சுலேகா! இப்படி என்னருகே வந்து உட்கார்ந்து கொள். உன்னிடம் ஒன்று கேட்க வேண்டும்" என்றாள்.

அந்தப் பணிப்பெண்ணும் "இளவரசியாரே! நான் சுலேகா இல்லை. சுரேகா" என்று கூறியவாறே அவளருகே போய் நின்றாள். அதுகேட்டு வித்தியா "அப்படியா! நீங்கள் இருவரும் பார்ப்பதற்கு ஒன்று போல இருப்பதால் இந்தத் தடுமாற்றம் ஏற்படுகிறது. நீயும் சுலேகாவும் இரட்டைப் பிறவிகளா?" என்று கேட்டாள்.

அவளும் "இல்லை இளவரசியாரே! நாங்கள் இருவரும் உடன் பிறந்தவர்கள் கூட இல்லை. வெவ்வேறு தாய் வயிற்றில் பிறந்தவர்கள்" என்றாள். வித்தியாவும் "அப்படியா? நீ இங்கு எவ்வளவு வருடங்களாக இருக்கிறாய்?" என்று கேட்டாள்.

சுரேகாவும் "வருடக் கணக்கில் இல்லை இளவரசியாரே! இரண்டு மாதங்களாகத்தான் இருக்கிறேன்" என்றாள். அப்போது வித்தியா "இவ்வளவு பெரிய மாளிகையில் நீங்கள் இருவருந்தானா பணிப்பெண்கள்?" என்று கேட்டாள்.

சுரேகாவும் "நேற்று உங்களுக்குப் பணிபுரிய நீலாவும் மாலாவும் வந்தார்கள். இன்று நாங்கள் வந்திருக்கிறோம். நாளை யார் வருவார்களோ தெரியாது. தினமும் வெவ்வேறு பணிப்பெண்கள் வருவார்கள். எங்களைப் போலப் பலர் இங்கே இருக்கிறார்கள். ஆனால் அவர்களை எல்லாம் நான் பார்த்ததும் கிடையாது. அவர்களின் பெயர்களும் எனக்குத் தெரியாது" என்றாள்.

வித்தியாவும் "இங்கே ஆண்கள் யாரும் இல்லையா? இதன் சொந்தக்காரரர் யார்? ஆணா? பெண்ணா?" என்று கேட்டாள். சுரேகாவும் "இங்கு ஆண்களும் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் இருப்பது தனி இடம். அவர்கள் பெண்கள் வசிக்கும் பகுதிக்கு வர மாட்டார்கள். நான் இந்த மாளிகையின் சொந்தக்காரரைப் பார்த்த

தும் கிடையாது. சரி, இனி நீங்கள் உறங்குங்கள்" எனக்கூறி அவள் மீது ஒரு பட்டுப் போர்வையைப் போர்த்திவிட்டு சன்னலருகே போய் அங்கிருந்த இருக்கையில் அமர்ந்தாள்.

மாலையானதும் வித்தியாவதி கண் விழித்தபோது தன்னெதிரே அந்தக் கிழவி நிற்பதைக் கண்டாள். அவள் வித்தியாவைப் பூங்காவிற்கு அழைத்துச் செல்லவே வந்திருந்தாள். அவள் வித்தியாவைத் தவிர வேறு யாரையும் பூங்காவிற்கு அழைத்துச் செல்வதில்லை. கிழவி வித்தியாவிடம் அதிகம் பேசாமலும் 'ஆ' 'ஊ' என்ற சொற்களிலேயே பதிலையும் கூறி வந்தாள். இவர்களை எல்லாம் ஆட்டி வைப்பவர் யார் என்று வித்தியாவுக்குத் தெரிவில்லை. இதை எல்லாம் நினைத்தவாறே அவள் கிழவியுடன் பூங்காவிற்குள் சென்றாள்.

இருட்டியதும் அவர்கள் மாளிகைக்குள் சென்றார்கள். இம்முறையும் கிழவி அவளை வேறொரு அறைக்குள் விட்டுச் சென்றாள். அங்கு இளவரசி இரவு உணவை உண்டு விட்டுப் படுத்து உறங்கினாள். மறுநாள் காலை கண் விழித்த போது அவளுக்குப் பணி புரிய மாலினி, சாலினி என்ற இரு பெண்கள் வந்திருந்தார்கள். அவர்களும் தோற்றத்திலும் உருவத்திலும் வித்தியாவதியைப் போலவே இருந்தார்கள். அவளது ஆடைகளைப் போலவே அவர்களும் அணிந்திருந்தார்கள்.

தன்னைக் கவர்ந்து வந்தவர்கள் முன்கூட்டியே தக்க ஏற்பாடுகளைச் செய்து பிறர் தன்னை எளிதில் கண்டு கொள்ளாமல் குழப்பி விட இப்படி எல்லாம் செய்கிறார்கள் என்று வித்தியாவதி தெரிந்து கொண்டாள். அங்கிருந்து தப்பிச் செல்லத் தக்க தருணத்தையே அவள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)



# அக்கரைப் பச்சை

முத்து பெட்டிக்கடை வைத்து வாழ்ந்து வந்தான். அவன் அயல்நாட்டிற்குப் போய் வியாபாரம் செய்து நிறையப் பணம் சம்பாதித்து வரலாம் என கிளம்பத் தயாராகவே பலர் மனைவி மக்கள் குடும்பம் என்று பாராமல் பணத்தாசையால் போகாதே என்று கூறி அவனைத் தடுத்துப் பார்த்தார்கள். ஆனால் முத்து அதை எல்லாம் கேட்கவில்லை.

அப்போது அயல்நாடுகளுக்குப் போய் விட்டு மாணிக்கம் என்பவன் அவ் வூருக்குத் திரும்பி வந்தான். அவனைக் கண்ட முத்து அவனிடம் அயல்நாடுகள் பற்றி விசாரிக்கலானான். அங்கே தெருக்களில் முத்துக்களும் வைரங்களும் இறைந்து கிடப்பது உண்மையா என்று அவன் மாணிக்கத்திடம் கேட்டான்.

மாணிக்கமோ "அங்கு அப்படி ஒன்று இல்லை. நான் கொண்டு போன எடைக் கற்களைப் பார்த்து அவர்கள் வைரம் என நினைத்து வாங்கிக் கொண்டார்கள். நான் கொண்டு போன எடைக்கற்கள் சலவைக்கல்லால் ஆனவை. அது அந்த ஊர்க்காரர்களுக்கு வைரமாகத் தோன்றியது! நம் நாட்டிலிருந்து போகும் எந்த பளபளப்பான கல்லையும் அந்நாட்டினர் வைரம் என நம்பி விடுகிறார்கள்" என்றான்.

"பூ! அதனால்தான் இக்கரைக்கு அக்கரை பச்சை என்று நம் முன்னோர் கள் கூறினார்களா!" என்று முத்து நினைத்து ஆச்சரியப்பட்டான்.





# இராஜதந்திரியே!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் மயானத்தில் நீ விடா முயற்சியுடன் ஒரு வேலையைச் செய்ய முனைந்திருப்பது எனக்கு வியப்பை அளிக்கிறது. நாட்டை ஆளும் மன்னனுக்கு விடா முயற்சி இருந்தால் மட்டும் போதாது. யாவற்றையும் சீர்தூக்கி ஆராய்ந்து செயல்படும் சக்தியும் வேண்டும். உனக்கு விஜயபாலன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

வெகு காலத்திற்கு முன் விஜய

## வேதாளம் சொல்லும் கதை



புரியை வீரபாலன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் திடீரென இறக்கவே அவனது மகன் விஜய பாலன் அரியாசனத்தில் அமர்ந்தான். அப்போது அவன் நாடு அடைந்துள்ள மோசமான நிலையைக் கண்டு மனம் புழுங்கினான். அவனது தந்தை போக விலாசங்களில் மூழ்கிக் கிடந்ததால் அதிகாரிகளின் அட்டூழியங்களையும் லஞ்சம் வாங்குவதையும் கவனிக்கவில்லை.

உள்நாட்டில் இதனால் சீரழிந்த ஆட்சி என்றால் விஜயபுரியின் அண்டை நாடுகளாலும் ஆபத்து நேரும் நிலை உருவாகி இருந்தது விஜயபுரிக்குக் கிழக்கே அதற்கு அடங்கிய வேடுவ நாடு இருந்தது. அந்நாட்டு சிற்றரசன் தன் நாட்டைச் சுதந்திர நாடாக அறிவிக்கத் துடித்துக் கொண்டிருந்தான். வேடுவ நாட்டை ஒட்டி இருந்த மலயகிரி நாட்டு மன்னன் மலய கேது விஜய புரியின் குழப்ப நிலையைப் பயன் படுத்திக் கொண்டு அந்நாட்டைக் கைப்பற்றச் சதி செய்து கொண்டிருந்தான்.

இந்நிலையில் நாட்டின் மன்னனான விஜயபாலன் தன் முதலமைச்சர் வாமனரை அழைத்து "அமைச்சரே! நம் நாட்டில் நிலையைப் பார்த்தீர்களா? நாட்டில் எங்கு பார்த்தாலும் குழப்பம். அதிகாரிகள் எதையும் கவனிப்பதில்லை. சுயநலத்துடன் பணம் சேர்த்துக் கொள்வதில்தான் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். மக்களிடையே அதிருப்தி ஏற்பட்டுள்ளது. நாட்டில் நிலவும் நிலை போதாது என்று அயல் நாடுகளிலிருந்தும் நமக்கு ஆபத்து வரவிருக்கிறது. நமக்கு அடங்கியுள்ள சிற்றரசன் வேடுவ மன்னன் தன் நாட்டைச் சுதந்திர நாடு எனப் பிரகடனப் படுத்த தயாராகிக் கொண்டிருக்கிறான். மலய கிரி மன்னனோ நம் நாட்டைத் தாக்க ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறான். இப்போது என்ன செய்வது?" என்று கேட்டான்.

வாமனரும் முதலில் உள்நாட்டில் சீர்திருத்தங்களை மேற்கொள்வதை விட வெளிநாடுகளால் ஏற்

படும் ஆபத்துகளைத் தடுக்க வேண்டும் எனக் கூறினார்.

விஜயபாலனும் "அதை எப்படித் தடுப்பது?" எனக் கேட்கவே அமைச்சரும் "மலயகிரி மன்னரின் ஒரே மகளான மந்தாகினியை நீங்கள் மணந்து கொண்டு விட்டால் நம் பலம் அதிகரித்து விடும். வேடுவ மன்னன் அப்போது நம்மை கண்டு பயப்படுவான். சுதந்திரம் என்ற பேச்சை எடுக்கமாட்டான்" என்றார்.

விஜயபாலனும் "இது நடக்குமா? நம்முடன் சம்மந்தம் செய்ய மலயகேது சம்மதிக்க மாட்டானே. அவன் நம் நாட்டையே கைப்பற்ற சதி செய்கிறான். மேலும் மந்தாகினி மிகவும் கர்வம் பிடித்தவள். அவள் இத்திருமணத்திற்கு இணங்குவாளா?" என்று கேட்டான்.

அமைச்சரும் "ஒற்றர்களின் தகவல்படி அவள் தங்களை மணக்க விரும்புவதாகத் தெரிகிறது. இந்தத் திருமணம் மட்டும் நடந்து விட்டால் வெளிநாடுகளைப் பற்றிய பயமே நமக்கு இராது" என்றார்.

விஜயபாலனும் புன்னகை புரிந்தவாறே "இது பற்றி யோசித்து முடிவு செய்யலாம்" எனக் கூறி அவரை அனுப்பிவிட்டான். பிறகு அவன் தன் குதிரை மீது ஏறித் தன்னந்தனியானாகத் தன் நாட்டு எல்லைப் புறத்தில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு வாழும் தன் குருவைக் காணச் சென்றான்.



அவன் அந்த ஆசிரமத்தை அணுகச் சற்று தூரம் இருக்கையில் திடீரென ஒரு புலி வழியில் பாய்ந்து வந்தது. அப்போது அவனது குதிரை மிரண்டு வேகமாக ஓடி எங்கெங்கோ சென்றது. விஜயபாலன் அதனை அடக்க முயன்றும் அவனால் முடியவில்லை.

புலியிலிருந்து தப்பிய அவன் தன் குதிரையை அடக்க முடியாமல் போன போது எங்கிருந்தோ ஒரு விசித்திரக் குரல் கேட்டது. அக்குரலைக் கேட்டதும் அவனது குதிரை சட்டென நின்றது. விஜயபாலனுக்கு அந்த விசித்திர ஒலி குதிரையை நிற்கச் செய்வது என்பது தெரியும். கட்டுக்கு அடங்காமல் ஓடும் குதிரை



களை நிறுத்த வேடுவர்கள் அந்த விசித்திர ஒலியைப் பயன்படுத்தி வந்தார்கள்.

விஜயபாலன் தன் குதிரை மீதிருந்து கீழே இறங்கி அந்த ஒலி எங்கிருந்து வந்தது எனப் பார்த்தான். அப்போது கையில் வில், அம்புகளுடன் கொத்து மீசையுள்ள ஒரு இளைஞன் அவனை நோக்கி வந்தான். விஜயபாலன் அவனைத் தலைமுதல் கால்வரை உற்றுப் பார்த்து விட்டு "நீதான் விசித்திரக் குரல் கொடுத்து என் குதிரையை நிறுத்தினாயா?" என்று கேட்டான்.

அந்த இளைஞனும் "ஆம் எனத் தலையை ஆட்டி மாறுபட்ட குரலில் "நீங்கள் மிகவும் களைத்துப் போயிருக்கிறீர்கள். சற்று ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். நான் இன்னும் சிறிது நேரத்தில் வருகிறேன்" என்று சொல்லி விட்டுச் சென்றான். விஜயபாலன் அவன் நடப்பதையும், மாறுபட்ட குரலில் பேசியதையும் நன்கு கவனித்தான். அவனுக்கு அந்த இளைஞனைப் பற்றி ஏதோ சந்தேகம் எழுந்தது. அதையும் தீர்த்துக் கொள்வது என்ற முடிவுடன் அவன் அங்கேயே ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்தான்.

சில நிமிடங்களுக்குப் பின் அந்த இளைஞன் ஒருகையில் பழங்களையும் மற்ற கையில் ஒரு குடுக்கையில் பாலையும் எடுத்துக் கொண்டு வந்து விஜயபாலனிடம் கொடுத்தான். அவனும் அவற்றை வாங்கிக் கொண்டு "என்னை நீ அடையாளம் கண்டுகொண்டு இப்படி உபசரிக்கிறாய் என்று தெரிகிறது. நீ என்னுடன் வந்தால் என் தர்பாரில் ஒரு நல்ல உத்தியோகம் போட்டுக் கொடுக்கிறேன்" என்றான்.

அந்த வாலிபனோ சிரித்தவாறே "அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். நான் எந்தப் பிரதிபலனையும் எதிர்பார்த்து இதைச் செய்யவில்லை. இப்படிச் செய்ய வேண்டியது என் கடமை. அதைத்தான் செய்தேன்" என்று கூறிவிட்டுச் செல்ல முயன்றான்.

அப்போது விஜயபாலன் "நீ வேடுவ நாட்டைச் சேர்ந்தவன் என்று

தெரிகிறது நான் உன் மன்னன். இதைத் தெரிந்துமா நீ நான் சொல்வதை ஏற்காமல் போகிறாய்?" என்று கோபத்தோடு கேட்டான். அந்த இளைஞனும் "நீங்கள் என்னைச் சந்தேகித்து நான் மாறு வேடத்திலுள்ள வேடுவ மன்னனின் மகள் விநோதினி எனத் தெரிந்து கொண்டு விட்டீர்கள். என்னைச் சீண்டி நான் என்ன பதில் சொல்லப் போகிறேன் என்பதைக் காணத் தான் இப்படிக் கோபம் கொண்டவர் போல நடிக்கிறீர்களா?" என்று கேட்டாள்.

விஜயபாலனும் "நீ நடந்து சென்ற விதமும் உன் மாற்றுக் குரலும் உன்னைக் காட்டிக் கொடுத்து விட்டது. உன் கம்பீர நடை உன்னை ஒரு அரசனின் மகள் எனக் காட்டி விட்டது. சரி. இனி நான் கிளம்புகிறேன்" என்றான்.

விநோதினியோ "அதெல்லாம் முடியாது. இப்போது நீங்கள் என்னுடன் வாருங்கள்" என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு சென்றாள். அங்கே ஓரிடத்தில் கருங்கல்லில் ஒரு தேவியின் சிலை இருந்தது. விநோதினி விஜயபாலனை அதன் முன் நிறுத்தி "இது நாங்கள் வழிபடும் சக்தி தேவதை. இந்த தேவதையின் அருள் இருந்தால் எல்லாச் சிக்கல்களும் தீர்ந்து விடும் என்பது எங்கள் நம்பிக்கை" என்றாள்.



விஜயபாலனும் பக்தி சிரத்தையுடன் அந்த தேவதையை வணங்கினான். பிறகு விநோதினியிடம் சரியாக இரண்டு மாதங்கள் கழிந்ததும் அதே இடத்தில் அவளைச் சந்திக்க வருவதாகக் கூறிவிட்டுச் சென்றான்.

மறுநாளே அவன் தன் நாட்டில் அநியாயம் புரியும் அதிகாரிகளையும் லஞ்சம் வாங்கும் உத்தியோகஸ்தர்களையும் கண்டுபிடித்து கடுமையாகத் தண்டிக்கலானான். திருடர்களையும் கொள்ளைக்காரர்களையும் பிடித்துச் சிறையில் தள்ளினான். நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தி மக்களுக்கு அரசாங்கத்திடம் நம்பிக்கை ஏற்படும்படிச் செய்தான்.



இரண்டு மாதங்களில் அந்நாட்டில் நல்ல மாறுதல்கள் ஏற்பட்டன.

குறிப்பிட்ட நாளன்று விஜய பாலன் வேடுவ நாட்டிலுள்ள சக்தி தேவதையைக் காணச் சென்றான். அங்கு ஆண் வேடத்தில் விநோதினி வந்திருந்தாள். அவளிடம் அவன் "விநோதினி! இந்த சக்தி தேவதை யின் அருளால் என் உள்நாட்டுச் சிக்கல்களை எல்லாம் தீர்த்து விட்டேன். எனக்கு இந்த உதவி நீ செய்தது மகத்தானது. இதற்கான நன்றிக் கடனை நான் எப்படித் தான் தீர்க்கப் போகிறேனோ? நீ என்னோடு என் நாட்டிற்கு வா. என்னை மணந்து கொண்டு என் பட்டத்து ராணியாகி என் அரியா சனத்தை அலங்கரி. இதுதான் என் வேண்டுகோள்" எனப் புன்னகை புரிந்தவாறே கூறினான்.

விநோதினி அதற்குப் பதில் எதுவும் கூறாமல் தலை குனிந்து நின்றாள். அதைக் கண்ட விஜய பாலன் "உன் மனதில் உள்ளது எனக்கு புரிந்துவிட்டது. நீ முறைப் படி என்னை மணக்க விரும்புகிறாய். என்ன, நான் கூறுவது சரிதானே" என்று கேட்டான். விநோதினியும் 'ஆம்' என்பதற்கு அடையாளமா கத் தலையை அசைத்தாள்.

அப்போது விஜயபாலன் "அப் படியானால் உன் தந்தையை என் அரண்மனைக்கு அனுப்பி முறைப் படிப் பெண்ணைக் கொடுப்பதா கச் சொல்லவை. நான் அவரை மகிழ்ச்சியுடன் வரவேற்று என் சம்மதத்தைத் தெரிவித்து உன்னை மணந்து கொள்கிறேன் என்றான். இதற்குச் சில நாட்களுக்குப் பின் விநோதினியின் அண்ணன் தூரய் யன் பல காணிக்கைகளை விஜய பாலனுக்கு சமர்ப்பித்துத் தன் தங் கையை மணக்கும்படி வேண்டினான். விஜயபாலனும் அதற்குச் சம்மதிக் கவே ஒரு நல்ல முகூர்த்தத்தில் அவ னுக்கும் விநோதினிக்கும் விவா கம் இனிது நடைபெற்றது.

விஜயபாலன் இதற்குப் பின் தன் படைகளோடு வேடுவ நாட் டின் படைகளையும் சேர்த்துக் கொண்டு மலயகிரியின் மீது போர்

தொடுத்தான். போரில் மலயகேது தோற்றுப் போனான்.

அவன் விஜயபாலனிடம் "என் நாடு எனக்கு திரும்ப எனக்கு வேண்டும் என்று நான் ஆசைப்பட வில்லை. ஆனால் என் ஒரே மகள் மந்தாகினி உன்னையே மணக்க வேண்டும் என்று இருக்கிறாள். நீ அவளை மணந்து கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்" என்றான்.

விஜயபாலனும் அதற்குச் சம்மதித்து மந்தாகினியை மணந்து கொண்டான். இவ்வாறாக அவன் விஜயபுரி, மலயகிரி, வேடுவ நாடு ஆகிய மூன்று நாடுகளின் மன்னனாகி விட்டான்.



வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னா! தன் தந்தை போக விலாசத்தில் மூழ்கி ஆட்சியைக் கவனியாததால் சீர்குலைந்த நாட்டை நல்ல நிலைக்கு விஜய பாலன் கொண்டு வந்தது உண்மையே. இதற்கு அதிக ராஜதந்திரம் தேவை இல்லை. விடா முயற்சியால் சாதித்து விடலாம். ஆனால் அயல் நாட்டு விவகாரங்களைக் கையாளும் போதுதான் ராஜதந்திரம் மிகவும் தேவைப்படுகிறது. அப்படி எதுவும் விஜயபாலனிடம் இருந்ததாகத் தெரியவில்லை. மந்தாகினி அவனை மணக்க விரும்பினாள் என அவன் தெரிந்துகொண்ட போதிலும் அவளை மணக்கும் முயற்சியில் ஈடுபடவில்லை. ஆனால் விநோதினியின் விஷயத்தில் அவன் நடந்து கொண்ட விதமே அலாதி. மந்தாகினி கர்வம் பிடித்தவள் என்று கூறிய அவன் பிறகு அவளை மணந்து கொண்டான். இதெல்லாம் முன்னுக்குப் பின் முரணாக இல்லையா? விஜயபாலனின் போக்கு என்ன? இக்கேள்விகளுக்கு விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

அதற்கு விக்கிரமனும் "விஜய பாலன் மன்னனாக விளங்க எல்லாத் தகுதிகளையும் பெற்றவன் என்பது நன்கு தெரிகிறது. உள்நாட்டு விஷயங்களைவிட அயல்

நாடுகள் பற்றிய விஷயங்களைத் தான் முதலில் கவனிக்க வேண்டும் என்று முதலமைச்சர் கூறிய யோசனையை அவன் ஏற்கவில்லை. உள்நாட்டில் நிலையைச் சீராக்கி மக்களின் நம்பிக்கையைப் பெறுவதே தன் முதல் வேலை எனக் கருதினான். எனவே ஊழல் அதிகாரிகளைக் கண்டுபிடித்து தண்டித்தான். திருட்டு, கொலைகள் நடக்காமல் தடுத்தான். இவற்றால் மக்களின் அபிமானத்தைப் பெற்றான். வேடுவ மன்னன் தன் நாட்டைச் சுதந்திர நாடாக அறிவிக்க நினைத்தான். மலையகேதுவோ விஜயபுரியையே கைப்பற்ற நினைத்தான். விநோதினி தான் விஜயபாலனை விரும்புவதாகச் சூசகமாகத் தெரிவித்தாள். அதனால்தான் அவள் அவனை சக்தி தேவியிடம் அழைத்துச் சென்றாள். இக்காரணத்தால் அவன் விநோதினியை மணந்து கொண்டான். மந்தாகினி கர்வம் மிகுதியால் தன் தந்தை போரில் விஜயபாலனைத் தோற்கடித்து, அவனைத் தனக்கு விவாகம் செய்து வைப்பான் என எண்ணினாள். ஆனால் நிலைமை நேர்மாறாகி மலயகேது விஜயபாலனிடம் தன் மகளை மணந்து கொள்ளும்படி வேண்டிக் கொள்ளும் நிலைக்குத் தள்ளப்பட்டான். விஜயபாலன் அவளையும் மணந்து கொண்டான். முதலில் தன் நாட்டைச் சீர்திருத்தி, பிறகு வேடுவ மன்னனின் மகளை மணந்து அவனது உதவியோடு மலயகேதுவையும் தோற்கடித்து மந்தாகினியையும் மணந்து விஜயபாலன் மூன்று நாடுகளுக்கும் அதிபதியானது அவன் சிறந்த ராஜதந்திரி என்பதையே எடுத்துக் காட்டுகிறது'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—47




<u>நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:</u>

## உயரமான நாரை

உயரமான நாரைகள் உலகெங்கிலும் உள்ளன. உயரமான நாரைகளில் ஆப்பிரிக்க போட்பீல், ஆசியாக் கண்ட உயரமான நாரைகள் என்ற இருவகை நாரைகளும் நம் நாட்டிற்கு வந்து போகும் பறவைகளே. ஆனால் கருப்பு நிறக் கழுத்து கொண்ட நாரைகள் மட்டும் நம் நாட்டைச் சேர்ந்தவை. ஒரு மனிதனின் உயரமளவு தாண்டும் இந்த வகை நாரைகளே மிகவும் உயரமானவை. இவற்றிற்கு சிவப்பு நிற நீண்ட கால்களும் பெரிய கருநிற மூக்கும், நீலமும் பச்சை நிறமும் கலந்த உறுதியான கழுத்தும், அதன்கீழ் வெள்ளை நிறமும் மேல் பகுதியில் பளபளக்கும் கருநிறமும் இருக்கும். நீண்ட வெள்ளை நிற இறக்கைகளின் உதவியால் இவை வானத்தில் பறக்கும் போது பார்க்க மிக அழகாக இருக்கும்.

இவை தனித்தனியாகவே தென்படும். இவற்றின் கூட்டத்தைக் காண்பது மிக அரிது. இவை பலமாகவே கத்தாது. இவை ஆழமற்ற நீர் நிலைகளில், மீன்களையும் தவளைகளையும் மற்ற நீர் வாழ் பிராணிகளையும் பிடித்துத் தின்னும். நம் நாட்டின் வடக்கு, வடமேற்குப் பகுதிகளில் இவை அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றன. ஆனால் தென்பகுதியில் அவ்வளவாக இல்லை.



# நம் தற்கால இலக்கியம்

*பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழி களில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார் கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.*

## பிரேம்சந்தின் 'கோதான்'



அயோத்திக்கு அருகே பேலாரி என்ற கிராமத்தில் ஹோளரி ராம் என்ற ஏழை விவசாயி வாழ்ந்து வந்தான். அவன் நீண்ட நாட்களாகவே ஒரு பசுவை வாங்க வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தான். ஆனால் அதற்கு அவனிடம் பணம் இருக்கவில்லை. அதே கிராமத்தில் போலா என்பவனின் மனைவி இறந்து போனாள். அவன் மறுபடியும் மணம் செய்து கொள்ள விரும்பினான். அவன் ஹொளரிராமிடம் "நீ எனக்கு ஒரு பெண்ணை மண முடித்து வை. உனக்கு ஒரு பசு கொடுக்கிறேன்" என்றான். ஹொளரிராம் அவ்வாறே செய்வதாகக் கூறி பசுவை முன்கூட்டியே வாங்கிக் கொண்டான்.

பசு வந்தது முதல் ஹொளரிராமிற்கு பலபுதிய பிரச்னைகள் முளைத்தன. போலாவின் வீட்டிலிருந்து பசுவை ஓட்டி வந்தவன் ஹொளரி ராமின் மகன் கோபர். அவன் போலாவின் வீட்டில் போலாவின் மகளும் இளம் விதவையு மான குணியாவைச் சந்தித்தான். அவர்களிடையே அன்பு வளர்ந்தது. முடிவில் அவர்கள் இரகசியமாய்த் திருமணம் செய்து கொண்டார்கள்.

ஹொளரிராமின் வீட்டில் பசுவைக் கண்டு அவனது சிற்றன்னையின் மகன் ஹரிராம் பொறாமை கொண்டான். ஒருநாள் அவன் அந்தப் பசுவிற்கு விஷம் கொடுத்துக் கொன்றான். அவன் கையும் மெய்யுமாய்ப் பிடிபடவே அவன் பயந்து தப்பி ஓடி ஊரைவிட்டே போய்விட்டான்.



கோபரின் ரகசியத் திருமணம் சில நாட்களுக்குப் பின் ஊராருக்குத் தெரிந் தது. அது மாபெரும் பாவம் என்றார் கள். ஆனால் ஹௌரிராமின் மனைவி தனியா குணியா மீது இரக்கப்பட்டுத் தன் வீட்டில் இடம் கொடுத்தாள். ஆனால் போலா தன்மகளின் பாவச்செயலை மன்னிக்கவில்லை. குணியாவை வீட்டை விட்டு வெளியேற்றுமாறு ஹௌரிரா மிடம் சொன்னான். ஆனால் ஹௌரிராம் அதற்கு மறுப்பு தெரிவிக்கவே போலா கோபம் கொண்டுதான் கொடுத்த பசுவின் விலையை கொடுக்குமாறு வற் புறுத்தினான். ஹௌரி ராமிடம் பணம் இல்லை. போலாவோ அதற்கு ஈடாக அவனது எருதுகளை ஓட்டிக் கொண்டு போய்விட்டான்.

கோபர் குணியாவுடன் நகரில் போய் வாழலானான். ஆனால் அவளுக்கு நகர வாழ்க்கை பிடிக்கவில்லை. அவளது முதல் குழந்தை இறந்தது. கோபர் ஒரு தொழிற் சாலையில் வேலை செய்தான். தினம் குடித்துவிட்டு வந்து அவன் தன் மனைவி யைத் துன்புறுத்தலானான். தொழிற்சாலையில் வேலை நிறுத்தம் நடக்கவே அங்கு நடந்த கைகலப்பில் கோபர் படுகாயப்பட்டான். குணியா பொறுமையுடன் அவனுக்குப் பணி விடை புரிந்து அவன் மனதை மாற்றினாள். கோபர் திருந்தி சமூகசேவகி டாக்டர் மாலதி வீட்டுத் தோட்டக்காரனாய் பணிபுரியலானான்.

கிராமத்தில் ஹௌரிராம் சிரமப்படலானான். அவன் தன் மூத்தமகளின் கல்யா ணத்தால் கடனாளி ஆனான். அந்தக் கடனைத்தீர்க்க அவன் தன் இளைய மகள் ரூபாவை ஒரு பணக்காரக் கிழவனுக்கு மணம் முடித்து வைத்தான். ரூபா பணக் கார வாழ்க்கையில் மகிழ்ந்தாள். தன் தந்தைக்கு ஒரு பசுவையும் அனுப்பினாள்.

ஹௌரிராம் கூலிவேலை செய்து தளர்ந்து போனான். உடல் நிலை மோசமாகி அவன் மரணத்தை எதிர்பார்க்கலானான். பசுவைக் கொன்ற ஹரி திரும்பி வந்து அவனிடம் மன்னிப்புக் கோரினான். ஹௌராம் எல்லாவிதத் திலும் திருப்தி அடைந்தான். அவன் இறக்கும்போது தன் ஆத்மா சாந்தி அடைய கோதானம் செய்யும்படித் தன் மனைவி தனியாவிடம் கேட்டுக் கொண்டான். அப்போது தனியா தன்னிடம் இருந்த இரு நாணயங்களை எடுத்துத் தன் கண வனின் கைகளில் வைத்து அதை கோதானமாக ஏற்கும்படி பிராம்மணர்களிடம் கூறியவாறே தன் நினைவை இழந்து விழுந்தாள்.

இந்தப் புதினத்தை எழுதியவர் பிரேம் சந்த். பிரபல ஹிந்தி எழுத்தாளர். இந்தப் புதினத்தில் பல சமூகப் பிரச்னைகள் அலசப்பட்டிருக்கின்றன. 1880-ல் வாரணாசிக்கு அருகே பிறந்த இவர் முதலில் உர்து மொழியில் தான் எழுதி னார். பிறகு ஹிந்தியின் உயரிய இடம் பெற்றார். 1936-ல் இவர் அமரரானார். ஹிந்தி இலக்கியவானில் ஒளிவிடும் நட்சத்திரமாக இன்றும் திகழ்கிறார்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த கவி வித்தியாபதி எந்த மொழியில் எழுதினார்?
2. வேகமாக வந்த ஒரு நதியை ஒரு முனிவர் தடுத்து அதனைக் குடித்துத் தன் காது வழியே வெளியிட்டாராம். அந்த முனிவர் யார்? அந்த நதி எது?
3. பாரதப் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி யாருடன் பேச 1966-ல் தாஷ்கண்டிற்குச் சென்றார்?
4. தானேஸ்வரத்தில் ஹர்ஷ சக்கரவர்த்தியைத் தோற்கடித்த தென்னிந்திய மன்னன் யார்?
5. கி.மு. ஐந்தாவது நூற்றாண்டில் முதலாவதாகக் குறிப்பிடப்பட்ட பாரத சிற்பி யார்?
6. மகாபாரதப்படி ஜெனமே ஜெயனின் சர்ப்பயாகத்திலிருந்து தப்பி ஓடிய சர்ப்பராஜன் யார்?
7. ஆறு ருதுக்களுக்கு நன்றி செலுத்தி பார்சிகள் விழா கொண்டாடுகிறார்கள். அந்த விழா எது?
8. ஏகலவ்ய, ராஜலட்சுமி விருதுகள் எந்த விளையாட்டுகளுக்காகக் கொடுக்கப்படுகின்றன?
9. நம் நாட்டில் மிக அதிக மாநிலங்கள் வழியே செல்லும் ரயில் எது?
10. கேரளாவின் தலைச்சேரி எதனால் புகழ் பெற்றது?
11. நம் நாட்டிலே மிகப்பெரிய பராக்கா அணை ஏன் கட்டப்பட்டது?
12. அஜந்தா வண்ண ஓவியங்களின் தனித்தன்மை யாது?
13. ராஜீவ் காந்தி கொலை செய்யப்பட்ட ஸ்ரீ பெரும்புதூர் ஒரு பிரபல வைணவ ஆச்சாரியார் பிறந்த இடம். அவர் யார்?
14. நடராஜர் ஆலயம் புகழ் பெற்றுள்ள ஊர் எது?

## விடைகள்

1. விரஜபோலி.
2. ஜஹ்னு. ஜாஹ்னவி.
3. பாகிஸ்தான் அதிபர் அயூப்கான்.
4. இரண்டாவது புலிகேசி.
5. மகாகோவிந்த். தம்மபாத்ரோ.
6. தட்சகன்.
7. காஹம்பாஸ்.
8. போபோ.
9. ஜம்முவிலிருந்து கன்யா குமரி செல்லும் ஹிமாத்திரி எக்ஸ்பிரஸ். 9 மாநிலங்கள் வழியே செல்கிறது.
10. நம் நாட்டில் தலைச்சேரியில்தான் முதன் முதலில் சர்க்கஸ் ஆரம்பமானது. இவ்வூரிலிருந்து ஏராளமாய் சர்க்கஸ் கலைஞர்கள் வந்தார்கள்.
11. கல்கத்தா துறைமுகத்தை ஆழப்படுத்த.
12. விசேஷவண்ணக்கலப்பு.
13. இராமானுஜர்.
14. சிதம்பரம்.



# குறைந்த பலன்

திருவேங்கடம் அவ்வூரிலேயே பெரிய பணக்காரன். அவன் தன்னிடம் உதவி கேட்டு வருபவர்களுக்கு பண உதவி செய்யாமல் அறிவுரைகளைக் கூறி அனுப்பி விடுவது வழக்கம். அந்த அறிவுரைகளின்படி நடந்தவர்களுக்கு நஷ்டம் ஏற்பட்டதேயொழிய பயன் எதுவும் ஏற்படவில்லை.

ஒருமுறை திருவேங்கிடத்தின் அண்டை வீட்டுக்காரனான அய்யாசாமிக்கு ஏதோ ஒரு நோய் கண்டது. வைத்தியர் வந்து பார்த்து "இதைத் தீர்க்க கிருஷ்ண துளசி இலைகள் வேண்டும். அந்த துளசி செடி நம் ஊரில் திருவேங்கடத்தின் வீட்டில்தான் இருக்கிறது" என்றார்.

அய்யாசாமியின் மகன் திருவேங்கடத்தின் வீட்டிற்குப் போய்க் கொஞ்சம் துளசி இலைகளைக் கொடுக்கும்படிக் கேட்டான். திருவேங்கடமோ "ஐயோ! துளசி இலைகளைப் பறிப்பது மகாப்பாவம். நான் அதைச் செய்யமாட்டேன். இவ்வூர் கோவிந்தன் கடையில் இச்செடியின் விதைகள் விலைக்குக் கிடைக்கும். அவற்றை வாங்கி உங்கள் வீட்டுக் கொல்லையில் போட்டால் துளசிச் செடிகள் முளைக்கும். அவற்றிலிருந்து இலைகளைக் கிள்ளி எடுத்துக் கொள்" என்று கூறி அனுப்பிவிட்டான்.

அய்யாசாமியின் மகன் 'கிருஷ்ண துளசி' 'கிருஷ்ண துளசி' என்று ஜபித்துக் கொண்டே கோவிந்தனின் கடைக்கு ஓடினான். வழியில் அவனைக் கண்ட ஒரு யோகி "அவன் அவ்வாறு கூறுவதன் காரணம் கேட்டு அறிந்து "திருவேங்கடம் உனக்கு நல்ல அறிவுரைதான் வழங்கி இருக்கிறான். நீ

—சுப. கிருஷ்ணசாமி—



அதன்படியே செய்'' என்றார். அய்யாசாமியின் மகன் யோகியும் திருவேங்கடம் கூறியதையே சொன்னது கேட்டு நம்பிக்கை கொண்டு கோவிந்தனின் கடையிலிருந்து துளசி விதைகளை வாங்கிப் போய்த் தன் வீட்டுக் கொல்லைப் புறத்தில் தெளித்தான். அவை மறுவிநாடியே பெரிய செடிகளாகவே அவற்றின் இலைகளைப் பறித்து மென்று அய்யாசாமி குணம் அடைந்து விட்டான்!

இதற்குப் பின் யோகி அய்யாசாமியைக் கண்டு ''திருவேங்கடம் கூறிய அறிவுரையால் உன் நோய் போயிற்று. இதனால் நீ போய் அவனுக்கு நன்றி செலுத்திவிட்டு அவனது அறிவுரைகள் மிகவும் சிறந்தவை எனக்கூறி நீ முன்னுக்கு வர ஏதாவது அறிவுரை கூறும்படிக் கேள்'' என்றார். அய்யாசாமியும் யோகி கூறியபடியே செய்தான்.

திருவேங்கடமும் ''அய்யாசாமி! உன்னிடமுள்ள பணத்தை எல்லாம் மூட்டையாகக் கட்டி அதை உன் வீட்டுக் கொல்லையில் புதைத்து வை. அங்கு பணமரம் வளர்ந்து அதில் காசுகளாகக் காய்க்கும்'' என்றான். அதைக்கேட்டு விட்டு அய்யாசாமி யோகியை கண்டு ''அந்த திருவேங்கடம் அயோக்கியன். என் பணத்தை புதைத்தால் பணமரம் முளைத்துக் காசுகளாகக் காய்க்குமாம். என்னை அவன் படு முட்டாள் என்று நினைத்து விட்டான்!'' என்று ஆவேசத்துடன் கூறினான்.

யோகியும் சிரித்தவாறே ''அவன் நல்ல அறிவுரையையே கூறி இருக்கிறான். அவன் கூறியபடியே செய்'' என்றார். யோகி சொன்னதால் அய்யாசாமி திருவேங்கடம் சொன்னது போலவே செய்தான் அவன் தன் வீட்டுக் கொல்லையில் பணத்தைப் புதைத்ததும் உடனே ஒரு பெரிய மரம் வளர்ந்து விட்டது அதன் கிளைகளில் ஏராளமான காசுகள் காய்த்துத் தொங்கின.

அப்போது யோகி ''நீ இந்தக் காசுகளை எல்லாம் பறித்து வைத்துக் கொண்டு நீண்ட காலம் சுகமாக

வாழ். நாளைக் காலையில் இந்த மரம் கிருஷ்ண துளசிச் செடிகளும் மாயமாய் மறைந்து விடும்'' என்று கூறினார். அய்யாசாமி அவரை வணங்கி ''சுவாமி! இதெல்லாம் உங்கள் மகிமையால்தானே நடந்தது! அந்த அயோக்கியன் திருவேங்கடம் சொன்னதால் அல்லவே'' என்று கேட்டான்.

யோகியும் ''நீ திருவேங்கடத்தைத் தவறாக எண்ணி விட்டாய். அவன் மகாப் புண்ணியவான்'' என்று கூறிவிட்டுப் போய் விட்டார். அய்யாசாமியும் காசுகளைப் பறித்து வைத்துக் கொண்டு சுகமாக வாழலானான்.

அய்யாசாமி நல்லவன். அதனால் தன்னிடம் உதவி கேட்டு வந்தவர்களுக்கு எல்லாவிதத்திலும் உதவி புரிந்து வந்தான். சில நாட்களுக்குப்பின் ஆறுமுகம் என்பவன் அய்யாசாமியிடம் வந்து ''இன்று திருவேங்கடம் ஊரில் இல்லை. அதனால் உன்னிடம் வந்தேன். ஒரு பத்து ரூபாய் கடனாகக் கொடு'' என்றான்.

அய்யாசாமியும் ''நான் உனக்குப் பத்து ரூபாய் வேண்டுமானால் கொடுக்கிறேன். ஆனால் நீ ஏன் திருவேங்கடத்தின் பெயரைச் சொல்லி அவனை அநாவசியமாகப் பெரிய மனிதனாக்குகிறாய்?'' என்று கேட்டான்.

ஆறுமுகமும் முகத்தைச் சுளித்தவாறே ''இவ்வளவு நாட்களாக உன்னை ஒரு பெரிய மனிதன்



என்று நினைத்திருந்தேன். திரு வேங்கடத்திடம் பணம் கேட்டால் ஏன் எதற்கு என்று கூடக் கேட்கா மல் கொடுத்து விடுவான். அவன் எங்கே? நீ எங்கே?'' என்றான்.

அய்யாசாமி ஆறுமுகம் கேட்ட பணத்தை எடுத்து கொடுத்து விட்டு திருவேங்கடம் பற்றி ஊரில் விசாரிக்கவே அவனுக்கு நல்ல பெயர் இருப்பது தெரிந்தது.

இதனால் அவன் மனம் வாட் டம் அடைந்தது ''எல்லோருக்கும் நல்லவனாக உள்ள திருவேங்கடம் எனக்கு அயோக்கியனாகப் படு கிறான் என்றால் என்னிடம்தான் ஏதோ குறை இருக்க வேண்டும் அல்லது எனக்கு உதவும் நோக்கத் துடன் தான் முன்பு எனக்கு அறி வுரை கூறி இருக்கவேண்டும். நான் தான் அவனைத் தவறுதலாக எடை போட்டுவிட்டேனா?'' என அவன் நினைத்தான்.

மறுநாள் திருவேங்கடம் ஊரி லிருந்து வந்ததும் அய்யாசாமி அவனைச் சந்தித்து ''யோகி உன் அறிவுரை சிறந்தது என்று கூறியும் நான் அதை நம்பாமல் யோகியின் மகிமை என நினைத்தேன். ஆனால் இப்போது உண்மை தெரிந்தது. என்னை மன்னித்து விடு'' என் றான்.

திருவேங்கடமும் ''எல்லாமே அந்த யோகியால் தான் நடந்தது. அவர் இந்த ஊருக்கு வந்து விட்டு போனது முதல் என் அறிவுரைகள் எல்லாம் எல்லோருக்கும் நன்மை பயக்குவனவாகவே ஆகி விடுகின் றன. என் அறிவுரைகளால் அவர் களுக்கு அதிகலாபம் ஏற்படுவது கண்டு அவர்கள் கேட்கும் பணம் கொடுப்பதில்தான் அவர்களுக்குக் குறைந்த லாபம் கிடைக்கிறது எனக் கண்டேன். எனவே இப்போது அறிவுரைகள் கூறாமல் பணமே கொடுக்கிறேன்'' என்றான்.

இப்படிப்பட்டதா திருவேங்கடத் தின் மனபான்மை என எண்ணித் திகைத்தான் அய்யாசாமி!



# அம்புலிமாமா செய்திகள்



## பார்வையற்றோர் மலையேற்றம்

மகாராஷ்டிர மாநிலத்தைச் சேர்ந்த பத்து பார்வையற்ற வாலிபர்கள் இமயமலையில் ஏறக் கிளம்பியுள்ளார்கள். அவர்களில் மூவர் 17,220 அடி உயர ஷிதிதர் சிகரத்தின் மீது ஏறி ஒரு சாதனை புரிந்துள்ளார்கள். பார்வையற்ற வர்கள் இவ்வளவு உயரம் ஏறியது இதுவே முதல் தடவையாகும். இவர்கள் டார்ஜிலிங்கிலுள்ள மலை ஏறும் பயிற்சி பள்ளி மாணவர்கள்.

## பெயர்களில் குழப்பம்

சீனாவின் மக்கட் தொகை 107 கோடி 20 லட்சம். இதில் 7 கோடி 20 லட்சம்பேர் களுக்கு 'வாங்க்' என்ற ஒரே பெயர் வைக்கப் பட்டுள்ளது. இதனால் அடையாளம் கண்டு பிடிப்பது சிரமமாகிறது. ஒரெழுத்து வீட்டுப் பெயர் அந்நாட்டில் 2000 ஆண்டுகளாக வழக் கத்தில் உள்ளது. லி, லூ, யாங்க், என்ற பெயர்களில் 25 கோடிக்கும் மேலாக மக்கள் உள்ளனர். இந்தப் பெயர்களை மாற்ற எவ்வ ளவோ முயன்றும் தக்க பலனை அது அளிக் கவில்லை. இந்தப் பெயர்களால் குழப்பம் இன்னமும் அந்நாட்டில் நீடித்துக் கொண்டு தான் இருக்கிறது.




## மிகச்சிறிய வயதில் பட்டதாரி

இங்கிலாந்தில் மிகச்சிறிய வயதில் இந்தி யச் சிறுவனான கணேஷ் சிற்றம்பலம் தனது 13-வது வயதில் சர்ரே பல்கலைக்கழகத்தில் கணிதத்தில் பி.எஸ்.ஸி சிறப்புப் பட்டம் பெற்றுள்ளான். இதற்கு முன் 13 வயது 7 மாதம் நிரம்பிய ருத்லாரன்ஸ் தான் இப்படிப் பட்டம் பெற்றான். அந்த சாதனையை சிற் றம்பலம் முறியடித்துவிட்டான். முதலில் எல்லோரையும் போல கல்லூரியில் சேர்ந்து படித்து 18 வது வயதில் பி.எஸ்.ஸி தேர்வு எழுதலாம் என இவன் எண்ணினானாம். ஆனால் அதுவரை காத்திராமல் தேர்வு எழுதி யாவரினும் முதலாவதாகவும் வந்து மிகச்சிறிய வயதில் இப்பட்டம் பெற்று விட்டான்.






# குதிரை முட்டை

ஒரு வியாபாரி தன் வியாபாரத்தின் பொருட்டு போகும்போது ஒருநாள் இருட்டிவிடவே வழியில் வரும் கிராமத்தில் தங்கி இரவுப் பொழு தைக் கழித்து விட்டுப் போகத் தீர் மானித்துக் கொண்டான். அவன் ஊருக்குள் நுழையும்போது ஒருவன் அவ்வியாபாரியிடம் "ஐயா! நான் போதை மருந்திற்கு அடிமையான வன். இன்று அதை வாங்கக் காசு இல்லை. கால் ரூபாய் கொடுத்தால் இன்றையபொழுது போய்விடும்" என்றான். வியாபாரியும் கால் ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டு ஊருக்குள் போனான்.

அங்கே ஒரு வீட்டின் முன் நின்று அந்த வீட்டுக்காரனிடம் அன்றிரவு தங்க இடம் கேட்டான். அவனும் அதற்கு இணங்கவே வியாபாரி தன் குதிரையை அவ்வீட்டின் முன் உள்ள முளையில் கட்டிவிட்டு வீட்டிற்குள் போய்ப் படுத்துத் தூங்கினான்.

அவன் காலை எழுந்து வெளியே வந்தபோது அந்த வீட்டுக்காரன் முளையில் கட்டியிருந்த குதி ரையை அவிழ்த்து அதன் மீது ஏறி உட்கார்ந்து கொண்டான். அதைக் கண்ட வியாபாரி "என்ன இது? என் குதிரை மீது ஏறிக் கொண்டு எங்கே போகிறாய்? நான் என் பயணத்தைத் தொடர வேண்டும்" என்றான்.

அந்த வீட்டுக்காரனும் "உன் குதிரையா? இது என் குதிரை. இந்த மரமுளை தினமும் ஒரு குதிரை முட்டைபோட அதிலிருந்து குதிரை வரும். அப்படி வந்த குதிரைதான் இது. வேண்டுமானால் அக்கம்பக் கத்தில் உள்ளவர்களைக் கேட்டுப் பார்" என்றான்.

அப்போது வியாபாரி "இது

–பரத் வெங்கட்ராமன்–

பெருத்த மோசடி வேலை. என் குதிரையை அமுக்கிக் கொள்ளப் பார்க்கிறாயா?" என்று கத்தினான். அதுகேட்டு அக்கம்பக்கத்தவர் கூடி விட்டனர். அவர்களும் அந்த வீட்டுக்காரனைப் போலப் பிறரை ஏமாற்றி வாழ்பவர்களே. அதனால் அவர்கள் அந்த வீட்டுக்காரன் கூறு வதே உண்மை என்று அடித்துக் கூறினார்கள்.

வேறு வழி இல்லாமல் வியாபாரி அந்த வீட்டுக்காரனைப் பிடித்து இழுத்துக் கொண்டு அவ்வூர் நீதி பதியிடம் சென்று தன் வழக்கைக் கூறினான். கிராமத் தலைவனான அந்த நீதிபதி வீட்டுக்காரனிடம் கேட்கவே அவனும் "இது என் வீட்டு முளை போட்ட முட்டையி லிருந்து வந்த குதிரையே. இப்படி எனக்குக் குதிரை கிடைப்பதைச் சாட்சி கூறப் பலர் இருக்கிறார்கள். நான் என் சாட்சிகளை அழைத்து வருகிறேன்" என்றான்.

நீதிபதி வியாபாரியிடம் "உனக்கு சாட்சி யாராவது இருக்கிறாரா?" என்று கேட்கவே அவனும் "நான்கு குதிரையோடு வந்ததைப் பார்த்த ஒருவன் இருக்கிறான்" என்றான். அதுகேட்டு நீதிபதி "சரி. இருவ ரும் உங்கள் சாட்சிகளை அழைத்து வாருங்கள்" என்றார். வீட்டுக் காரன் தன் அக்கம் பக்கத்தவரை சாட்சியாக அழைத்து வந்தான். அவர்கள் சாட்சியம் அளித்து குதிரை வீட்டுக்காரனுடையதே என்றனர்.



முந்தின நாள் கால் ரூபாயைத் தன்னிடமிருந்து பெற்ற போதை மருந்து உட்கொள்பவனைத் தேடிக் கண்டுபிடித்து வியாபாரி அழைத்து வந்தான். அவனைக் கண்டதும் நீதிபதி வியாபாரியிடம் "இவனா உன் சாட்சி? இவன் எப்போதும் போதை மருந்து குடித்து மயக்க நிலையில் இருப்பவன் ஆயிற்றே" என்றார்.

அப்போது அந்த சாட்சி "நான் ஒன்றும் மயக்க நிலையில் இல்லை. நேற்றிரவு முழுவதும் ஒரு பெரிய வேலையைச் செய்து கொண்டிருந் தேன். அதனால் போதை மருந்து சாப்பிடக் கூட எனக்கு நேரம் இல்லை" என்றான்.

நீதிபதியும் சிரித்தவாறே "அப் படி என்ன வேலை செய்தாய்?" என்று கேட்கவே அவனும் "நேற் றிரவு முழுவதும் நம் ஊர்க் குளத்தின் அடியே மரக்கட்டை களைப் போட்டு எரியவிட்டு குளத் தில் உள்ள மீன்களை எல்லாம் வேகவைத்துக் கொண்டிருந்தேன்" என்றான். அதைக் கேட்டு நீதி பதி உட்பட எல்லோரும் சிரித் தனர்.

நீதிபதியும் "இன்னமும் உன் போதை தெளியவில்லையா? என்ன உளறுகிறாய்?" என்று கேட்டார். அவனும் "நான் ஒன்றும் உளறவும் இல்லை. போதை நிலையிலும் இல்லை. நான் குளத்தடியே நெருப்பு மூட்டி மீன்களை வேக வைத்தது நம்பத்தகாதது என்றால் மரமுளை முட்டையிட்டுக் குதிரை யைக் கொடுக்கும் என்பதை மட்டும் நம்பச் சொல்கிறீர்களா?" என்று கேட்டான்.

அதுகேட்டு நீதிபதியும் வெட் கித் தலைகுனிந்தார். அப்போது தான் வீட்டுக்காரன் மோசம் செய்கிறான் என்பது நீதிபதிக்குப் புரிந்தது. அவர் குதிரை வியா பாரியினுடையதே என்று தீர்ப்பு கூறி வீட்டுக்காரனுக்கு அபராதம் விதித்தார்.






அனுமார் அந்த நான்கு மூலிகை களைத் தேடலானார். ஆனால் அவற்றைக் கண்டு பிடிக்க முடிய வில்லை. ஆகவே அவர் சற்றும் தாமதியாமல் அந்த சிறுமலையையே பெயர்த்து எடுத்துக் கொண்டு கிளம்பினார். மலையோடு வரும் அனுமாரைக் கண்டு வானரர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். அனுமாரும் ஆகாயத்திலிருந்து கீழே இறங்கி அந்த மலையைக் கீழே வைத்துவிட்டு எல்லோரை யும் வணங்கினார்.

காற்று அம்மூலிகைகளின் மீது பட்டு வீசவே இராமரும் இலட்சு மணனும் மற்றும் பல வானரர் களும் தம் நினைவு பெற்று எழுந் தார்கள். விபீஷணன் அனுமா ரைக் கட்டித் தழுவிக் கொண்டு பாராட்டினான். இறந்து கிடந்த பலவானரர்கள் அந்த மூலிகை களின் காற்று பட்டதும் உயிர் பெற்று எழுந்தார்கள். அவர்களது சோர்வும் மறைந்தது. உடலில் ஏற் பட்டிருந்த காயங்களும் மறைந்து போயின.

வானரர்களைப் போல நினைவு இழந்து விழுந்து கிடந்த சில ராட் சஸர்களும் தம் நினைவு பெற்று எழுந்தார்கள். ஆனால் ராட்சஸ வீரர்கள் இறந்ததுமே அவர்களை கடலில் தூக்கிப் போட்டும் அவர் களது உடல்களை எரித்தும் விட்ட தால் இறந்து அங்கில்லாத போன

—திரும்பலை யாகம்—



இருட்டியபின் வானரர்கள் தீவட்டிகளைப் பிடித்துக் கொண்டு இலங்கை நகருக்குச் சென்றார்கள். ராட்சஸர்கள் ஏராளமாய் வானரர்கள் வருவது கண்டு பயந்து ஓடலானார்கள். அத்தீயில் மாளிகைகளில் இருந்த விலையுயர்ந்த பொருள்கள் தீக்கிரையாயின. சில ராட்சஸர்கள் கூட எரிந்து போனார்கள். எங்கும் ஒரே கூச்சல். ராட்சஸர்கள் வானரர்களை இலங்கை நகருக்குள்ளேயே எதிர்க்க வேண்டியதாயிற்று.

சுக்கிரீவன் வானரர்களிடம் "நீங்கள் இராவணனின் மாளிகைக்குப் போங்கள்" எனக் கட்டளை இட்டான். அதன்படி வானரர்கள் தீவட்டிகளுடன் இராவணனின் மாளிகையை அடைந்தார்கள். அதைக் கண்ட இராவணன் கடும் கோபம் கொண்டான். அவன் கும்பகர்ணனின் மகன்களான கும்பனையும் நிகும்பனையும் கூப்பிட்டு வானரர்களை அடித்து விரட்டும்படிக் கூறினான். அவர்களும் தம்முடன் யூபாட்சன், சோனிதாட்சன், பிரஜம்சன், கம்பனன் ஆகியோரைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு கிளம்பினான்.

ராட்சஸர்கள் உயிர்பெற்று வரவில்லை.

அந்த மூலிகைகளால் பெற வேண்டிய பயன்களைப் பெற்று முடிந்ததும் அனுமார் அந்த சிறு மலையைத் தூக்கிக் கொண்டு போய் முன்பிருந்த இடத்திலேயே வைத்து விட்டு வந்தார். அவரிடம் சுக்கிரீவன் "கும்பகர்ணன் இறந்தான். இராவணனின் மைந்தர்களும் மடிந்தார்கள். அதனால் இப்போதைக்கு இராவணன் போர் புரிய வரமாட்டான். இன்றிரவே பலசாலிகளான வானரர்களை எல்லாம் அழைத்துக் கொண்டு இலங்காபுரிக்குள் சென்று தாக்கலாம்" என்றான்.

இரு தரப்பினரும் கடும் போர் புரிந்தனர். அங்கதன் கம்பனனைக் கொன்றான். அதன்பின் அவன் சோனிதாட்சனைத் தாக்கி அவனது வாளை ஒடித்து அவனையும்

கொன்றான். பல ராட்சஸர்களைக் கொன்றவாறே அவன் பிரஜம்பனையும் கொன்றான். மைந்தன் பூபாட்சனோடு போர்புரிந்து அவனைக் கொன்றான்.

கும்பனை எதிர்த்துப் போர் புரிந்த அங்கதன் தன் நினைவை இழந்து விழவே இராமர் உடனே ஜாம்பவானை அங்கு அனுப்பினார். ஆனால் கும்பன் தன் அம்புகளால் வானரர்கள் தன்னருகே வராதபடி தடுக்கலானான். அதைக்கண்ட சுக்கிரீவன் அவனை எதிர்த்து அவனது வில்லை முறித்து அவனோடு மற்போர் புரிந்தான். அதில் கும்பன் இறந்து போனான்.



தன் அண்ணன் இறந்தது கண்டு ஆத்திரம் அடைந்து நிகும்பன் வானரர்களை கடுமையாகத் தாக்கினான். அவன் அனுமாரின் மார்பில் பலமாக அடித்தான். ஆனால் அனுமார் அதனைத் தாங்கிக் கொண்டு அவன் எய்த ஆயுதங்களை எல்லாம் தவிடு பொடியாக்கினார். அவர் நிகும்பனின் மார்பில் பலமான குத்துவிடவே அவன் ரத்தம் கக்கியவாறே தன் நினைவை இழந்து விழுந்தான்.

சற்று நேரத்தில் நிகும்பன் தன் நினைவு பெற்று அனுமாருடன் போர் புரியலானான். அனுமார் அவனது தாக்குதல் கடுமையாவது கண்டு அவனது தலையைப் பிடித்து அவனைத் தூக்கி 'கிர்' 'கிர்'ரென்று சுற்றித் தரைமீது ஓங்கி அடித்தார். நிகும்பன் ஆவென அலறியவாறே இறந்தான். கும்பனும் நிகும்பனும் இறந்தனர் என்பதைக் கேட்டு இராவணன் இடிந்து போனான்.

பிறகு அவன் கரனின் மகனான மகராட்சனைப் போருக்கு அனுப்பினான். மகராட்சன் இராமரோடு போர் புரிந்து இறந்து போனான். இதைக் கேட்ட இராவணன் ஆத்திரம் கொண்டு இந்திரஜித்தனை அழைத்தான். அவனும் வந்து "நான் யாகம் செய்து இந்த இராமனையும் இலட்சுமணனையும் கொன்று விடுகிறேன்" எனக்கூறி விட்டு யாகசாலைக்குச் சென்றான்.



அங்கு அவனை யாவரும் மரி யாதையுடன் வரவேற்றார்கள்.

இந்திரஜித் செய்யும் யாகம் மிகவும் விசித்திரமானது. அவன் தர்ப்பைப் புல்லுக்கு பதிலாகத் தன் ஆயுதங்களையும், இரும்புப் பாத்திரங்களையும் யாகத்தில் உப யோகித்தான். யாகத்தில் கருப்பு நிற ஆட்டை பலி கொடுத்தான். ஹோமம் புகை இல்லாமல் எரி யவே அவன் தனக்கே வெற்றி என மகிழ்ந்தான். பலவிதமாக எல்லா தேவதைகளையும் திருப்தி செய்து மாயசக்தி வாய்ந்த தன் ரதத்தில் ஏறி அமர்ந்தான். அந்த ரதம் சூரியனைப் போல ஒளி விட்டுப் பிரகாசித்தது.

இந்திரஜித் யார் கண்ணிலும் படாமல் மாயமாய் மறைந்து போர்க் களத்திற்கு வந்தான். அவன் வானரர் களிடையே உள்ள இராமரையும் இலட்சுமணனையும் கண்டுபிடித்து அம்புகளை எய்தான். இராமரும் இலட்சுமணனும் ஆகாயத்தையே தம் அம்புகளால் பந்தல் போலப் போட்டு தடுத்த போதிலும் அவர் களது அம்புகள் இந்திரஜித்தின் மீது படவே இல்லை. ஆனால் இந்திரஜித்தின் அம்புகளோ அவர் களைத் தாக்கிக் காயப்படுத்தி கொண்டிருந்தன. அவனது அம்பு கள் வானரப்படையிலும் பெருத்த சேதத்தை விளைவித்தன.

இலட்சுமணன் கோபம் கொண்டு "நான் இப்போதே பிரம்மாஸ் திரத்தை எய்து இந்த ராட்சஸர் களை எல்லாம் ஒழித்து விடு கிறேன்" என உறுமினான். இரா மர் அவனைச் சமாதானப்படுத்தி "இந்திரஜித் ஒருவனை அழிப்ப தற்காக உலகிலுள்ள ராட்சஸர் களை எல்லாம் அழிப்பது சரி யல்ல. நாம் இந்திரஜித்தை ஒழிக் கக் கூடிய சக்தி வாய்ந்த அஸ்தி ரங்களையே பிரயோகிப்போம்" என்றார்.

இதற்குள் இந்திரஜித்திற்கு புதிய யோசனை தோன்றியது. அவன் போர்க்களத்திலிருந்து இலங்கைக் குச் சென்றான். அங்கு சீதையைப் போலத் தோற்றம் அளிக்கும் மாய



சீதையை உருவாக்கி அவளைத் தன் தேரில் ஏற்றிக் கொண்டு போர்க்களத்திற்கு வந்தான். அந்த மாய சீதையை போர்க்களத்திலுள்ள இராமருக்கும் இலட்சுமணனுக்கும், காட்டி அவர்கள் கண்முன் அந்த மாயைக் கொன்றால் அவர்கள் திகைத்துப் போவர்கள் என அவன் நினைத்தான்.

இந்திரஜித் போர்க்களத்துள் வந்தது கண்டு அனுமார் ஒரு பெரிய பாறையை எடுத்து அவன் மீது எறிய வந்தார். அவரோடு பல வானரர்களும் பாறாங்கற்களை எடுத்துக் கொண்டு வந்தனர். ஆனால் கண்ணீர் வடித்து நிற்கும் மாய சீதையை இந்திரஜித்தின் ரதத்தில் கண்டதும் அவர் திகைத்துப் போய் நின்றார். அவன் சீதையை ஏன் போர்க்களத்திற்குக் கொண்டு வந்தான் என்று அவர் யோசிக்கலானார்.

இனியும் யோசிப்பதில் என்ன பயன் என நினைத்து அனுமார் தாக்குதலை ஆரம்பித்தார். அது கண்டு இந்திரஜித் மாயசீதையின் தலையைப் பிடித்துக் கொண்டு அவளை அடிக்கப் போனான். அதைக்கண்ட அனுமார் "அடே பாதகா! இதென்ன பாவச்செயல்! இப்படிச் செய்ய உனக்கு வெட்கமாக இல்லை? நீ மட்டும் சீதையைக் கொன்றால் மறுநிமிடமே உன்னையும் மற்ற ராட்சஸர்களையும் அழித்து விடுவோம். தெரிந்ததா?" என்று கர்ஜித்தார்.

இச்சமயத்தில் வானரர்களை ராட்சஸப் படை தாக்கலாயிற்று. இந்திரஜித் அனுமாரிடம் "இந்த சீதைக்காகத்தானே நீங்கள் எல்லாம் இலங்கைக்கு வந்தீர்கள். இவளை உங்கள் கண்முன்னாலேயே கொன்று விட்டு, பிறகு உன்னையும் அந்த ராமனையும் இலட்சுமணனையும் சுக்கிரீவனையும் அங்கதனையும் கொன்று விடுகிறேன் பார். அப்போது எந்த வானரன் இங்கே இருப்பான்?" என்று கத்தினான்.

இதன்பிறகு அவன் மாயசீதையை தன் வாளால் வெட்டினான். அவன் அட்டகாசமாகச் சிரித்த



ரதத்தை விலக்கி ஓட்டியதால் அத் தாக்குதலிருந்து அவன் தப்பினான். ஆனால் அந்தப்பாறை ராட்சஸப் படை மீது விழுந்த பல ராட்சஸர் களின் உயிரை வாங்கியது.

வானரர்களும் தாம் கொண்டு வந்து பாறாங்கற்களை இந்திரஜித் தின் ரதத்தின் மீது எறிந்தார்கள். இந்திரஜித் அவற்றைத் தன் அம்பு களால் தடுத்தான். தன் அம்புகளால் வானரர்களைக் கொல்லலானான்.

அப்போது அனுமார் வானரர் களிடம் "நாம் ஏன் வீணாக இந்த ராட்சஸர்களைக் கொல்ல வேண் டும்? நாம் சீதா தேவிக்காக வந் தோம். அவரோ இறந்துவிட்டார். இந்திரஜித் சீதையைக் கொன்று விட்டான் என்பதை இராமரிட மும், இலட்சுமணனிடமும் சுக்கிரீ வனிடமும் கூறி மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதை அவர்களிடமே கேட்போம், வாருங் கள்" என்றார். வானரர்களும் அவர் கூறியபடியே அவரோடு இராம ரைக் காணச் சென்றார்கள்.

இதைக்கண்ட இந்திரஜித் தான் போட்ட திட்டம் பலித்தது கண்டு மகிழ்ந்து யாகம் செய்து அபூர்வச் சத்தி பெற நிகும்பலைக்குச் சென் றான். அவன் யாகத்திற்கு இனி எவ்வித இடைஞ்சலும் இராது என்று எண்ணிக் கவலைப்படா மல் யாகத்தை ஆரம்பித்தான்.

அனுமார் வானரர்களுடன் வருத்

வாறே சுற்றிலும் ஒருமுறை பார்த்து மீசையை முறுக்கினான். அவனது சிரிப்பைக் கேட்டு வானரர்கள் பயந்து ஓடலானார்கள். அப்போது அனுமார் அவர்களை எல்லாம் தடுத்து நிறுத்தி "பயப்படாதீர் கள்! இவனது வெற்று வேட்டிற் காக இப்படி கதிகலங்குவது? இவ னது மாய சக்திக்கு மதிமயங்கு வதா?" என்று அறிவுறுத்தினார். அதைக்கேட்ட வானரர்கள் வீரா வேசம் பூண்டு ராட்சஸர்களைக் கடுமையாகத் தாக்கினார்கள்.

அனுமார் தம் கையிலிருந்த பெரிய பாறையை இந்திரஜித்தின் ரதத்தின் மீது எறிந்தார். இந்திர ஜித்தின் தேரோட்டி சட்டென

தத்துடன் வந்தது கண்டு இராமர் என்ன விஷயம் என்று கேட்கவே அனுமாரும் இந்திரஜித் சீதாதேவியைக் கொன்று விட்டதைக் கூறினார். அதைக்கேட்ட இராமர் துடிதுடித்து விழுந்து போனார். அது கண்டு எல்லா வானரர்களும் ஓடி வந்தார்கள். சிலர் அவர் மீது குளிர்ந்த நீரையும் தெளித்தார்கள்.

இலட்சுமணன் இராமரை மெதுவாக எழுப்பித் தாங்கிக் கொண்டு "அண்ணா! நீங்கள் தர்மத்தைக் கடைப்பிடித்து தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என நடந்து காட்டினீர்கள். நாட்டைத் துறந்தீர்கள். அன்னை கைகேயின் பால் வெறுப்பு கொள்ளவில்லை. ஆனால் எல்லாத் துயரங்களும் உங்களுக்குத்தான் ஏற்படுகின்றன. தர்மம் தலைகாக்கும் என்பார்கள். அது பொய்த்துப் போய்விட்டதா? நேர்மாறாக துன்மார்க்கனான இராவணனோ சுகமாக இருக்கிறானே. இதென்ன கேடு கெட்ட நிலை" என்று உள்ளம் குமுறக் கூறினான்.

அப்போது விபீஷணன் ஓடோடி வந்து இராமரிடம் "நான் விஷயத்தைக் கேள்விப்பட்டேன். இது நம் பத்தக்கதாக இல்லை. சீதையை உங்களுக்குக் கொடுக்க மறுத்த இராவணன் அவளைக் கொலை செய்ய அனுமதிப்பானா? ஒருக்காலும் இதற்குச் சம்மதிக்க மாட்டான். இது ஒரு சூழ்ச்சி. இந்திரஜித் விசேஷ சக்தி பெற நிகும்பலைக்குச் சென்று யாகம் செய்து கொண்டிருக்கிறானாம். அதற்கு தடை ஏற்பட்டுப் பாதியில் நின்றால் அவனுக்கு அச்சக்தி கிடைக்காது. அதற்காகவே இப்படி அவன் எல்லோரையும் ஏமாற்றி இருக்கிறான். அவன் போர்க்களத்தில் கொன்றது மாய சீதையாகத்தான் இருக்க வேண்டும். எனவே இப்போதே இலட்சுமணனை நிகும்பலைக்கு அனுப்பி இந்திரஜித்தின் யாகம் பூர்த்தி அடையாமல் செய்யுங்கள்" என்று கூறினான்.





# அதிசய சம்பவம்

சோமநாதன் பாலூரில் பெரிய வியாபாரி. அவனது தந்தைக்குப் பின் அவன் வியாபாரத்தை தொடர்ந்து நடத்தி வந்தான். அவனது அக்காவின் மகளுக்குக் கல்யாணம் என்று கடிதம் வரவே அவன் தன் ஊரைவிட்டு அவள் இருக்கும் ஊருக்குப் போக வேண்டியதாயிற்று. அவன் தன் ஊரிலுள்ள குப்பனின் வண்டியை முப்பது ரூபாய்க்கு வாடகை பேசி அதில் ஏறி உட்கார்ந்து கொண்டு சற்று துாரத்திலுள்ள தன் சகோதரியின் ஊருக்குக் கிளம்பினான்.

வழியோ கரடுமுரடானது. அடர்ந்த காட்டின் வழியாகத்தான் வண்டி சென்றாக வேண்டும். அப்படி வண்டி காட்டின் வழியே போய்க் கொண்டிருக்கையில் குப்பனின் மாமன் "குப்பா! குப்பா!! நில்" என்று கத்திக் கொண்டே ஓடி வந்தான். குப்பனும் வண்டியை நிறுத்தி "என்ன விஷயம் மாமா?" என்ற கேட்கவே அவன் மாமனும் "குப்பா! உன் தாயார் இறந்துவிட்டாள். நீ வந்து கொள்ளி போட வேண்டும். இப்போதே வண்டியைத் திருப்பிக் கொண்டு ஊருக்கு வா" என்றான்.

குப்பனும் சோமநாதனிடம் "ஐயா! நீங்கள் என்னை மன்னியுங்கள். நான் இப்போதே ஊருக்குப் போகவேண்டும். என் தாயாரின் ஈமச்சடங்குகளைச் செய்தாக வேண்டும். அதனால் இந்த வண்டியைத் திருப்பிக் கொண்டு போகிறேன். நீங்கள் இறங்கி இங்கேயே இருங்கள். உங்களுக்கு வேறொரு வண்டியை அனுப்பி வைக்கிறேன்" என்றான்.

வேறு வழியில்லாமல் சோமநாதன் வண்டியிலிருந்து இறங்கி

—பாபநாசம் சாமா—



னான். குப்பனும் தன் வண்டியை வேகமாக ஓட்டிக் கொண்டு போய் விட்டான். சோமநாதன் ஒரு மரத் தடியே போய்த் தன் கைப்பையைத் தலைக்குக் கீழ் வைத்துக் கொண்டு படுத்துவிட்டான். சற்று நேரத்தில் அவன் நன்கு தூங்கிவிட்டான். அவன் கண் விழித்துப் பார்த்த போது நன்கு இருட்டி விட்டது. அதுவரை அவன் எதிர்பார்த்த வண்டி வரவும் இல்லை. அந்தக் காட்டை விட்டாவது போய் வழி யில் ஏதாவது ஒரு கிராமத்தில் தங்கலாம் என நினைத்து அவன் எழுந்து வேக வேகமாக நடக்க லானான்.

ஆனால் அவன் பத்தடி போன துமே மழை பலமாகப் பெய்யலா யிற்று. அப்போது ஓரிடத்திலிருந்து ஒரு குரல் "ஐயா! இங்கே வாருங் கள். மழையில் ஏன் நனைகிறீர் கள்?" என்று கேட்டது. சோமநாதன் குரல் வந்த திசையைப் பார்க்கவே அங்கு பாழடைந்த கோவில் ஒன்று இருப்பதைக் கண்டான். அங்கு ஒரு உயர்ந்த இடத்தில் நின்ற ஒரு உருவம் "ஐயா! பயப்படாதீர்கள். நான் பேயோ பிசாசோ, ராட்ச ஸனோ அல்ல. உங்களைப்போல சாதாரண மனிதன்தான்" என்று கூறியது.

அப்போதும் சோமநாதன் சற்றுத் தயக்கத்துடன் அந்த இடத் திற்குச் சென்றான். அந்தப் பாழ டைந்த கோவிலில் ஒரு சிறிது இடம் மட்டும் மழையில் நனையா மல் இருந்தது. அந்த உருவமும் "வாருங்கள். என் பெயர் பசுபதி. உத்தியோகம் ஏதாவது கிடைக்குமா என்று அலைந்து கொண்டிருப் பவன். உங்களைப் பார்த்தால் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந் தவர் போலத் தெரிகிறது. இங்கே வந்து உட்காருங்கள். ஈரம் இல்லை" என்றது.

சோமநாதனும் "என் பெயர் சோமநாதன். பாலூரில் வசிக்கும் வியாபாரி. என்னை இந்த வட்டா ரத்தில் எல்லோரும் நன்கு அறி வார்கள்" என்றான். சோமநாதனும் பசுபதியின் பக்கத்தில் உட்கார்ந்து

கொண்டான். சற்று நேரம் வரை இருவரும் பேசவில்லை. மழையும் நிற்கவில்லை.

அப்போது பசுபதி "நாம் இந்த மழையில் இப்படி மாட்டிக் கொண்டோமே! இந்த மாதிரி வேடிக்கையான சம்பவம் ஏதாவது உங்கள் வாழ்க்கையில் நிகழ்ந்திருக்கிறதா? அதைச் சொல்லுங்கள். நமக்கும் பொழுதுபோகும்" என்றான். சோமநாதனுக்கும் அங்கே நிலவும் பயங்கர சூழ்நிலையில் ஏதாவது பேசிக் கொண்டு இருந்தால்தான் தன் மனதில் நிம்மதி ஏற்படும் எனத் தோன்றியது.



அவன் பசுபதியைப் பார்த்து "நான் இன்று வரை முப்பது ஆண்டுகளைக் கடந்து விட்டேன். மிகவும் வேடிக்கையான சம்பவம் எதுவும் என் வாழ்வில் நடக்கவில்லை. ஆனால் ஒரு மிக முக்கியமான சம்பவத்தைக் கூறுகிறேன். அது எப்படிப்பட்டது என்பதை நீயே யோசித்துப் பார்" எனக்கூறி அதைச் சொல்லலானான்.

"நான் பட்டணத்திற்குப் போய் படித்த காலம் அது. அங்கு என் அருமை நண்பனாக ராமநாதன் என்பவன் கிடைத்தான். என் படிப்பு முடிந்ததும் நான் என் ஊருக்கு வந்து வியாபாரத்தில் இறங்கினேன். அது சம்பந்தமாக நான் பட்டணம் போன போதெல்லாம் ராமநாதனைச் சந்தித்து வந்தேன். ஒரு முறை நான் அவனைச் சந்தித்த போது அவன் தன் தங்கையின் திருமணம் பற்றிக் கூறி, "ஒரு மிக நல்ல பையன் கிடைத்திருக்கிறான். ஆனால் அவனது பெற்றோர்கள் பத்தாயிரம் ரூபாய் வரதட்சணையாகக் கேட்கிறார்கள். என் தந்தையிடம் அவ்வளவு பணம் இல்லை. என்ன செய்வது எனத் தெரியாமல் விழிக்கிறோம்" என்றான்.

அப்போது நான் "பூ! இவ்வளவுதானா? அந்தப் பணத்தை நான் கடனாகக் கொடுக்கிறேன். நீங்கள் மெதுவாகத் திருப்பிக் கொடுக்கலாம்" என்றேன். பிறகு நான் ஊருக்கு வந்து என் தந்தையிடம் விஷயத்தைக் கூறிப் பத்தாயிரம்



ரூபாய் கொடுக்குமாறு கேட்டேன். என் தந்தையோ "இப்படிக் கேட் பவர்களுக்கு எல்லாம் பணத்தைத் தூக்கிக் கொடுத்தால் நாம் ஓட் டாண்டி ஆகிவிடுவோம். இப்படி எல்லாம் அசட்டுத்தனமாக எதுவும் செய்யக்கூடாது" எனக் கண்டிப் பாகக் கூறி விட்டார். ஆனாலும் நான் பிடிவாதமாகப் பத்தாயிரம் ரூபாய் கொடுக்கத்தான் வேண்டும் என்றேன்.

அப்போது என் தந்தை "சரி. இதற்கு ஒருவழி சொல்கிறேன். இருபது வருடங்களுக்கு முன் முருகப்பன் என்ற என் நண்பன் என்னிடம் ஐயாயிரம் ரூபாய் கட னாக வாங்கிப் போனான். இது வரை அவன் ஒரு பைசாக்கூடத் திருப்பிக் கொடுக்கவில்லை. வட்டி யும் அசலுமாக அது இப்போது இருபதாயிரம் ரூபாய் ஆகிறது. நீ அவனிடமிருந்து பத்தாயிரம் ரூபாய் வசூல் செய்து உன் நண்பனுக்குக் கொடு" என்றார். நானும் முருகப்ப னின் ஊரையும் முகவரியையும் கேட்டுத் தெரிந்து கொண்டு அந்த ஊருக்குச் சென்றேன்.

அங்கு போகும் போது மாலை யாகி விட்டது. முருகப்பனின் வீட் டைத் தேடிக் கண்டுபிடித்தேன். ஆனால் அங்கே நான் போன போது வாசலில் பலர் கூடி இருந் தார்கள். நான் நேராக வீட்டினுள் சென்றேன். அங்கே முருகப்பன் இறந்து கிடப்பதைக் கண்டேன். அதன் பக்கத்தில் அவனது இருபது வயது மகள் உட்கார்ந்து அழுது கொண்டு இருந்தாள்.

வெளியே கூடி இருந்தவர்கள் எல்லாம் என்னை முருகப்பனின் நெருங்கிய உறவினன் என்று எண்ணி விட்டார்கள். அவர்கள் என்னிடம் "நல்லவேளை! நீங்களா வது வந்தீர்களே. முருகப்பனின் உடலை சூரிய அஸ்தமனத்திற்குள் தகனம் செய்ய வேண்டும்" என்றார் கள். முருகப்பனுக்கு அவ்வூரில் உற்றார் உறவினர் என்று யாருமே இருக்கவில்லை. என் தந்தையின் நண்பன் என்ற காரணத்தால் அவ னது உடலுக்கான தகனக் கிரியை

களைச் செய்தேன்.

மறுநாள் அவனது மகள் சுசீலா என்னை வணங்கி "நீங்கள் யாரென்று எனக்கு தெரியாது. ஆனால் கடவுள் போல் வந்து எனக்கு உதவினீர்கள். உங்களுக்கு நன்றி" என்றாள். முருகப்பன் ஊரில் எல்லோரிடமும் கடன் வாங்கி இருந்தான். அவற்றை எல்லாம் நான் அணிந்திருந்த தங்கச் சங்கிலி வைர மோதிரம் ஆகியவற்றை விற்று அடைத்தேன். பிறகு சுசீலாவிடம் "நீ இனி இந்த வீட்டில் தனியாக எப்படி இருப்பாய்? என்னோடு என் ஊருக்கு வந்து விடு. என் தகப்பனார் உன் தந்தையின் நண்பரே. உன்னை வைத்துக் காப்பாற்றத் தயங்க மாட்டார்" என்றேன்.

சுசீலாவும் இதற்குச் சம்மதித்தாள். ஆனால் ஊர்க்காரர்களோ முன் பின் தெரியாத என்னுடன் இளம் பெண்ணான சுசீலாவை அனுப்ப முடியாது எனக் கூறினார்கள். வேண்டுமானால் சுசீலாவை அப்போதே மணந்து கொண்டு அவளை நான் அழைத்துச் செல்லலாம் என்று கூறினார்கள். வேறு வழி இல்லாமல் நான் சுசீலாவை மணந்து கொண்டு அவளை என் ஊருக்கு அழைத்துச் சென்றேன். நான் வரதட்சணை வாங்காமல் கல்யாணம் செய்து கொண்டேன். இது என் வாழ்க்கையில் நிகழ்ந்த



எதிர்பாராத நிகழ்ச்சி.

இதை எல்லாம் கேட்ட பசுபதி "ரொம்ப அதிசய சம்பவம்தான் இது. இன்னும் மழை நிற்கவில்லை. நான் சொல்ல எதுவும் இல்லை என் பிரச்னை இப்போது ஏதாவது ஒரு உத்தியோகம் பெறுவதுதான். நீங்கள்தாம் வசதியுள்ளவர் ஆயிற்றே. ஏதாவது வேலை எனக்குப் போட்டுக் கொடுங்களேன்" என்று கேட்டான்.

இதைக்கேட்ட சோமநாதன் சற்றுக் கடுமையாக "ரொம்ப நன்றாக இருக்கிறதே! ஏதோ பொழுது போக வழியில் கண்ட உன்னிடம் பேசியதால் உனக்கு நான் வேலை கொடுக்க வேண்டுமா? என் வீட்டில்

இப்போது நிறைய வேலைக் காரர்கள் இருக்கிறார்கள். புதிதாக யாரையும் வைத்துக் கொள்ளத் தேவை இல்லை'' என்றான். அப் போது ஏதோ ஒரு வாடகை வண்டி யும் வரவே சோமநாதன் அதில் ஏறிக் கொண்டு தான் போக வேண்டிய ஊருக்குப் புறப்பட்டுப் போனான். அங்கு திருமணத்தில் கலந்து கொண்டு விட்டு மறுநாள் அவன் தன் ஊருக்கு வ்ந்து சேர்ந் தான்.

அவன் தன் வீட்டுக் கதவைத் தட்டியதும் அவன் மனைவி சுசீலா கதவைத் திறந்தவாறே "ஆ! வந்து விட்டீர்களா! நீங்கள் அடிக்கடி கூறும் உங்கள் நண்பர் இராமநாதன் வந்திருக்கிறார். அவரை உபசரித் தேன். அவர் இப்போது அந்த அறையில்தான் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார்" என்றாள். சோம நாதன் அந்த அறைக்குள் போய்ப் பார்த்துத் திகைத்துப் போனான். ஏனென்றால் அங்கே இராமநாதன் இருக்கவில்லை. படுக்கையில் ஒரு கடிதம் இருந்தது.

அதை எடுத்து சோமநாதன் படித் தான். அதில் "நான் பசுபதி. இராம நாதன் அல்ல. நீங்கள் என்னை நம்பவில்லை. எனக்கு உத்தியோகம் கொடுக்க முடியாது என்று கூறினீர் கள். அதனால் நீங்கள் கூறிய அதி சய சம்பவத்தில் வந்த இராமநாத னாக நடித்து உங்கள் மனைவியை நம்ப வைத்தேன். உங்கள் பணப் பெட்டியிலிருந்து பத்தாயிரம் ரூபாய் மாத்திரம் எடுத்துப் போகி றேன். இதைக் கொண்டு நான் வியாபாரம் தொடங்கி இரண்டு ஆண்டுகளில் இந்தத் தொகை யைத் திருப்பித் தந்து விடுவேன். இது என் வாழ்க்கையில் நடந்த அதிசய சம்பவம்'' என எழுதப் பட்டிருந்தது.

சோமநாதனும் "இவன் தன் சொல்லைக் காப்பாற்றுவான். இதில் சந்தேகம் இல்லை'' என்று நினைத்துக் கொண்டான்.





# வார்த்தை தவறுமா!

வெகு காலத்திற்கு முன் துருக்கி நாட்டின் ஹமீது என்ற பணக்காரர் இருந்தார். அவரிடம் உயர் தர அரபிக் குதிரை ஒன்று இருந்தது. அதனை ஐநூறு தினார்களுக்கு விற்பதாக அவர் அறிவித்தார். ஆனால் ஒரு குதிரையை அவ்வளவு விலை கொடுத்து வாங்க யாரும் முன் வரவில்லை.

ஒரு நாள் அஜீஸ் என்ற இளைஞன் ஹமீதைக் கண்டு "ஐயா! நான் உங்கள் குதிரையை வாங்க விரும்புகிறேன். ஆனால் நானோ பரமஏழை. நீங்கள் கேட்கும் ஐநூறு தினார்களை என்னால் கொடுக்க முடியாது. ஆனால் தங்களுக்கு ஒரு வாக்குறுதி அளிக்கிறேன். இன்றையிலிருந்து ஒரு வருட காலத்திற்கு உங்கள் குதிரை மீது ஏறிப் பயணம் செய்து பல நாடுகளுக்குப் போய் சம்பாதிக்கிறேன். இந்த ஒரு வருட காலத்தில் என்ன சம்பாதிக்கிறேனோ அவற்றை எல்லாம் உங்களுக்கே கொடுத்து விடுகிறேன்" என்றான்.

ஹமீதும் "சரி நீ சொல்வதை நம்புகிறேன். என் குதிரையை ஓட்டிக் கொண்டு போ. ஒரு வருடத்திற்குப் பின் உன்னை எதிர்பார்க்கிறேன்" என்றார். அஜீஸும் அவருக்கு நன்றி செலுத்திவிட்டு குதிரை மீது அமர்ந்து சென்றான்.

சில நாட்களுக்குப் பிறகு அஜீஸ் தன் குதிரை மீது சவாரி செய்தவாறே அந்நாட்டின் தலைநகரை அடைந்தான். அவன் குதிரை மீது அமர்ந்து அரண்மனை பக்கம் சென்றான். அப்போது அந்நாட்டு சுல்தான் அந்த அழகிய குதிரையைப் பார்த்தான். உடனே அதை விலைக்கு வாங்கி விட வேண்டும் என்று முடிவு செய்தான்.

அவன் அஜீஸை அழைத்து அவ

—துருக்கி நாட்டுப் பழங்கதை—



குறைந்த விலைக்கு எப்படி வாங்குவது என யோசனை கேட்டான்.

மந்திரியும் "நாளை அவன் வந்ததும் அவனை உங்கள் பூங்காவில் சந்தித்துப் பேசுவதாகக் கூறி அங்கே அனுப்புங்கள். அங்கு முன்னதாகவே தங்கள் மகள் இருக்கட்டும். நீங்களும் உங்கள் மகளுமாகச் சேர்ந்து பேசினால் அவன் குதிரையைக் குறைந்த விலைக்குக் கொடுத்து விடுவான். அப்படியும் அவன் கொடுக்காவிட்டால் அவனைப் பிடித்து சிறையில் தள்ளிவிட்டு அக்குதிரையை நாமே வைத்துக் கொண்டு விடலாம்" என்றான்.

சுல்தானும் அப்படியே செய்வதாகக் கூறி மறுநாள் காலை தன் மகளிடம் விஷயத்தை விளக்கிப் பூங்காவில் போய் இருந்து அஜீஸ் குதிரையோடு வந்ததும் அவனோடு கொஞ்சநேரம் பேசிக் கொண்டிருக்கச் சொன்னான். அவளும் பூங்காவிற்குச் சென்றாள். அஜீஸ் அரண்மனைக்கு வந்ததும் சுல்தான் அவனிடம் "நீ என் பூங்காவில் போய் இரு. நான் சற்று நேரத்தில் வந்து விடுகிறேன்" எனக்கூறி அவனைப் பூங்காவிற்கு அனுப்பினான்.

ஒரு அழகான இளைஞன் உயர்ரகக் குதிரை மீது அமர்ந்து பூங்காவிற்குள் வருவதைக் கண்ட சுல்தானின் மகள் அவனிடம் தன் மனதைப் பறிகொடுத்து விட்டாள். அவனையே மணப்பது என்று தீர்

னது குதிரையைத் தனக்கு விற்றுவிடும்படிக் கூறினான். அஜீஸிற்கோ குதிரையை விற்கும் எண்ணம் இல்லை. ஆனாலும் நாட்டின் சுல்தானே கேட்பதால் முடியாது எனக் கூறாமல் அதன் விலையை உயர்த்தி ஆயிரம் தினார்கள் என்றான்.

சுல்தானோ "ஒரு குதிரையின் விலை ஆயிரம் தினார்கள்? இது மிகவும் அதிகம்" எனவே அஜீஸும் "இந்த விலைக்குக் குறைந்து விற்க மாட்டேன்" என்றான்.

சுல்தானும் "சரி, நாளைக்கு வா. என் முடிவைச் சொல்கிறேன்" என்று கூறி அவனை அனுப்பினான். பிறகு அவன் தன் மந்திரியை அழைத்து அஜீஸிடமிருந்து குதிரையைக்

மானித்த அவள் அவன் வந்ததும் "நீ இங்கிருந்து குதிரையோடு போய் விடுவதுதான் நல்லது. ஏனென்றால் உன்னைச் சிறைப்படுத்திக் கொன்று விட்டு உன் குதிரையைத் தனதாக்கிக் கொள்ள என் தந்தையான சுல்தான் முயல்கிறார். நானும் உன்னோடு வந்து விடுகிறேன். நாம் இருவரும் எங்காவது போய்ச் சுகமாக வாழலாம். என்னிடம் ஒரு பெரிய அங்கி உள்ளது. அதில் நான் ஐயாயிரம் தினார்களை வைத்துத் தைத்திருக்கிறேன். இப்போதே போய் அணிந்து கொண்டு நான் என் தந்தை இங்கு வருவதற்குள் வந்து விடுகிறேன்" என்று கூறி விட்டுப் போய் அந்த அங்கியை அணிந்து கொண்டு வந்தாள்.

பூங்காவிற்குள் சுல்தான் வந்த போது அஜீஸ் இளவரசியுடன் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டான். தன் தந்தையைக் கண்டதும் அவள் "தந்தையே! இந்த குதிரை மீது ஏறி ஒரு முறை பூங்காவைச் சுற்றி வர ஆசையாக இருக்கிறது. இதுவோ புதுக்குதிரை. அதனால் இவரையும் என்னோடு குதிரை மீது இருக்கச் சொல்லி சவாரி செய்து காட்டச் சொல்லுங்கள்" என்றாள்.

சுல்தானும் அதற்கு அனுமதிக்கவே இளவரசி குதிரை மீது ஏறி அஜீஸின் பக்கத்தில் உட்கார்ந்தாள். அஜீஸ் குதிரையைத் தட்டவே அது வேகமாக ஓடியது. சற்று நேரம் காத்திருந்த சுல்தான் தன் மகளும் அஜீஸும் திரும்பி வராதது கண்டு



திகைத்துப் போய் வீரர்களை அனுப்பி தேடச் சொன்னான். அப் போதுதான் அஜீஸ் தன் மகளுடன் தப்பி ஓடிவிட்டான் என்பது அவ னுக்குத் தெரிந்தது.

அஜீஸூம் சுல்தானின் மகளும் பல ஊர்களுக்குப் போய் சுகமாகவே வாழ்ந்தார்கள். ஒரு வருட காலம் முடிந்ததும் அவன் சுல்தானின் மக ளிடம் "நான் இந்தக் குதிரையைக் கொண்டு இந்த வருடத்தில் சம்பாதித் ததை எல்லாம் ஹமீதிற்குக் கொடுத்து விடுவதாக வாக்களித்திருக்கிறேன். நான் சம்பாதித்ததில் நீயும் ஐயா யிரம் தினார்கள் கொண்ட அங்கி யும் அடக்கம். எனவே உன்னை உன் அங்கியோடு ஹமீதிடம் ஒப் படைக்க வேண்டும்" என்றான்.

அப்போது சுல்தானின் மகள் "என் அங்கியிலிருந்து இரண்டா யிரம் தினார்கள் எடுத்து ஹமீ திடம் கொடுங்கள். அதுதான் நீங் கள் இந்த ஒராண்டுகாலத்தில் சம் பாதித்தது என்றும் கூறிவிடுங் கள்" என்றாள்.

அஜீஸ் அதற்கு சம்மதியாமல் சுல்தானின் மகளையும் அவள் அணிந்திருந்த அங்கியையும் தன் ஊரிலுள்ள ஹமீதிடம் ஒப்படைத் தான். ஹமீதும் "அஜீஸ்! நீ சொன்ன சொல்லை நிறைவேற்றிவிட்டாய். நீ சம்பாதித்தது இந்த சுல்தானின் மகள் என்று கூறி அவளை நீ மிக வும் விரும்பியும் வாக்குத் தவறக் கூடாது என்பதற்காக என்னிடம் ஒப்படைத்து விட்டாய். உன் நேர் மையைப் பாராட்டுகிறேன். நீயே இந்த அங்கியையும் சுல்தானின் மகளையும் வைத்துக்கொள். இந்தக் குதிரையும் உனக்கேதான் எனக் கூறி அவர்களை வாழ்த்தி அனுப்பி னான்.







# இயற்கை விநோதங்கள்

## பல முட்டைகள் இடும்!



ஜென்னிரென் என்ற ஒரு மிகச் சிறிய பறவை. தன்னைவிடப் பெரிய பறவைகளை பயங்கரமாகத் தாக்கும் சக்தி பெற்றது. இது கூடுகட்ட மிகவும் விரும்புவதால் தனக்கு ஒரு கூடு கட்டுவதோடு மேலும் பல கூடுகளைக் கட்டுகிறது. இந்தக் கூடுகளில் ஏதாவது ஒன்றில் பெண் பறவை முட்டை இடட்டும் என்று விட்டு விடுகிறது. இந்தச் சிறிய பறவைக்கு லத்தீன் மொழியில் மிக நீளமான பெயர் 'ட்ரோக்லொடைடெஸ் ட்ரோக்லோடிடெஸ்'





## புழு பூச்சி சக்தி

ஒரு சாதாரண ஈ தன்னை விட பல நூறு மடங்கு நீள தூரத்தை ஒரு நொடியில் ஒரே தாவில் தாண்டக் கூடியது. இப்படி அது முன்னும் பின்னுமாகத் தாண்டுமாம். ஒரு எறும்பு 16 ஆண்டுகள் உயிர் வாழும். எறும்புகள் தம் புற்றில் பல புழு பூச்சிகளை இருக்க விடுகின்றன. தம் இடத்தைக் காக்கக் காவல் எறும்புகளையும் அமைத்துக் கொள்கின்றன. எறும்புகள் கட்டும் புற்றுகள் 15லிருந்து 20 அடி உயரம் கூட இருக்கும். இவை எகிப்திய பிரமிட்களைப் போல அமைந்திருக்கும்.



## மிகப் பெரிய வௌவால்கள்

பாலூட்டி உயிரினங்களில் வௌவால்களே பறக்கக் கூடியவை. காலோங் என அழைக்கப்படும் மிகப் பெரிய வகை வௌவால் இந்தோனேஷியாவிலும் மலேசியாவிலும் காணக் கிடைக்கிறது. அதன் இறக்கைகள் விரிக்கப்பட்டால் ஆறு அடி நீளமாக இருக்கும்.

little one a cuddles?













The
**CHANDAMAMA**
*Collection of Soft Toys*

CHANDAMAMA TOYTRONIX

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 டிசம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ அக்டோபர் 10ந் தேதிக் குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்பு களை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## ஆகஸ்ட் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **உண்டி கொடுக்க உணவு உண்டு!**

இரண்டாவது போட்டோ: **ஒன்றாய் வாழும் உணர்வு உண்டு!**

பரிசு பெற்றவர்: **சிவ. கலாதரன், சிதம்பரம்**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றுர், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



**அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்**

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஶ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி**

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

